# *Hipājattul Islām*

## *Malar 7, itaḻ 8*

## *August 1936*

Record no. 2690



# ஹிபாஜத்துல் இஸ்லாம்

நிச்சயமாக நாம் அ(ந்த இஸ்லாம் மதத்)தைக் காப்பாற்றுவோம். [குர்ஆன்

ஆசிரியர்:—மௌலவீ A. R. அப்துர்றஹீம் ஸாஹிப் (பாக்கவி)

| | | |
|---|---|---|
| மலர் 7 | ஹிஜ்ரி 1355 ஜமாதுல் அவ்வல் மீ<br>1936 ஜூலை ஆகஸ்டு மீ | இதழ் 8 |

## அல் குர்ஆன்

அல்லாஹ்தஆலாவை வணங்கப்படுமிடத்தில் அவனது திருநாமம் கூறப்படுவதை விலக்குபவன் யார்? இன்னும் அதன் மகிமைக்கு பங்கம் விளைவிப்பவனும், அதனைக் கெடுத்து விடுவதற்கு முயற்சிப்பவனும் யார்? அன்னோர் பயந்தவர்களாக பள்ளியினுள் பிரவேசிப்பார்கள். அவர்களுக்கு உலகிலும் தாழ்மை யேற்படும், மறுமையிலும் கடிசான வேதனை உண்டு.

(திரு குர்ஆன்)

இஸ்லாத்தின் ஆரம்பத்தில் நபிகள் திலகம் (ஸல்.) அவர்களும் சஹாபாக்களும் கஃபத்துல்லா ஷரீபில் தொழுகை நிறைவேற்றுவதையும் பாங்கு சொல்லுவதையும் விட்டு மக்கா வாசிகளான காபிர்கள், தடுத்துக்கொண்டிருந்தார்கள். இந்நிலைமையில் நபிகள் திலகம் (ஸல்.) அவர்கள் தனிமையில் தொழுகை நிறைவேற்றிக்கொண்டிருக்கும் சந்தர்ப்பம் கண்டு அவர்கள்மீது பலவாறான தாக்குதல் புரிவார்கள். ஒருநாள் பெருமானார் (ஸல்.) அவர்கள் தொழுகை நிறைவேற்றிக்கொண்டிருக்கும்போது சில துஷ்டர்கள் முன்வந்து அவர்களது குரவளையை நெறித்தார்கள். ஆனால் யாதொரு கெடுதலும் பெருமானார் (ஸல்.) அவர்களுக்கு ஏற்படாது அல்லாஹ் தஆலா காப்பாற்றிக்கொண்டான். நம்பெருமானார் (ஸல்.) அவர்கள் சதாவும் அல்லாஹ் தஆலாவை தியானித்துக்கொண்டிருந்ததற்காகவும், கஃபதுல்லா ஷரீபில் அவ்வல்லோனை வணங்க முற்பட்டதற்காகவும் அந்த காபிர்கள் அவர்களுக்கு இவ்வாறான தொந்திரைகளெல்லாம் கொடுக்க முற்பட்டனர். சத்தியத்தூதர் (ஸல்) செல்லும் பாதைகளிலெல்லாம் முற்கள் பரத்தப்பட்டன; வீடுகளுக்கு மேலாவிருந்து கற்கள் எறியப்பட்டன; நபிகள் திலகம் (ஸல்.) அவர்கள் தொழுகை நிறைவேற்றிக்கொண்டிருப்பதைக் கண்ட சில துஷ்டர்கள் விரைவிற் சென்று ஒட்டகை சாணத்தில் ஒரு கூடை எடுத்துவந்து சத்தியத்தூதர் (ஸல்.) அவர்கள் 'சஜ்தா'விற்குச் செல்லுங்கால் அதனை தங்கள்மீது வைத்துவிட்டனர். இஸ்லாத்தின் சத்துருக்கள் சுமார் 10-வருட காலம்வரை நபிகள் பெருமானர்

(ஸல்.), உத்தம சஹாபாக்கள் முதலியவர்களுடன் இவ்வாறாகவே நடந்து வந்தார்கள். சத்தியத்தூதர் (ஸல்.) அவர்கள் இவ்வாறான பற்பல கஷ்டசங்கடங்களையும் சகித்துக்கொண்டு கஃபத்துல்லாஹ்வின் மகிமைக்கு ஹானி ஏற்படாது பார்த்துவந்தார்கள். வரவர குப்பார்களின் அநீதி அதிக்கிரமம் மிகைத்துக்கொண்டு வரவே நபிகள் பெருமானார் (ஸல்.) அவர்கள் சில சஹாபிகளை 'ஹபஷா'வின் பக்கல் சென்றுவிடுமாறு கட்டளையிட்டார்கள். அதன்பின் தாங்களே அம்மக்கமாநகரைவிட்டு மதீனா ஷரீபுக்குச் சென்றார்கள்.

ஹிஜ்ரீ ஏழாவதாண்டில் நபிகள் பெருமானார் (ஸல்.) அவர்கள் 'உமரா'வை நிறைவேற்றுவதற்காக மக்கமாநகர் செல்ல நாடியபொழுது மக்கா வாசிகள் அதனை தடுத்துவிட்டார்கள். கடைசியாக அல்லாஹ் தஆலாவின் உதவிகொண்டு மக்காநகர் பெருமானார் சத்தியத்தூதர் (ஸல்.) அவர்கள் கைவசமானபின் குப்பார்கள் பயத்தின்மேலீட்டால் அதைவிட்டு வெளியில் நாலாபாகங்களிலும் செல்ல ஆரம்பித்தார்கள். முஸ்லிம்கள் முழுநிம்மதியோடு மக்காவினுட்பிரவேசிக்க முற்பட்டனர். நபிகள் பெருமானார் (ஸல்.) அவர்கள் "பைத்துல்லாஹ்வைச் சுற்றி வந்தபின் உட்கதவைத் திறக்குமாறு கட்டளையிட்டார்கள். சத்தியத்தூதர் (ஸல்.) அவர்கள் அதனுட் பிரவேசித்தபோது மலக்குகளின் உருவங்களும் விக்கிரகங்களும் அங்கு ஏற்பாடு செய்து வைக்கப்பட்டிருப்பதைக் கண்டார்கள். இதுவன்றி ஹஜ்ரத் இப்றாஹீம் (அலை.) அவர்கள் கையில் அம்புவைத்து நிற்பதுபோன்ற படமொன்றும் தயாரித்து வைக்கப்பட்டிருந்தது. இதனை நபிகள் திலகம் (ஸல்.) அவர்கள் பார்த்துவிட்டு அல்லாஹ் தஆலா காபிர்களை ஹலாக்காக்கி விடுவானாக; ஹஸ்ரத் இப்றாஹீம் (அலை.) அவர்கள் பக்கல் ஷிர்க்கை சம்மந்தப்படுத்துவதைத் தவிழ்ந்துகொண்டார்களில்லை." இப்றாஹீம் எஹூதியாகவோ, நஸரானியாகவோ இருக்கவில்லை. ஆனால் உண்மை முஸ்லிமாகவிருந்தார்" என்னும் திருவாக்கியத்தை ஓதி அங்கிருந்த விக்கிரகங்களை உடைப்பதற்கும் உருவங்களை அழித்தொழிப்பதற்கும் அனுமதியளித்தார்கள். இதற்கேற்ப சில தினங்களில் அப்புண்ணிய பரிசுத்த ஸ்தலம் அக்கெடுதிகளைவிட்டும் தூய்மையுடையதாகிவிட்டது.

### பைத்துல்முகத்தஸ்

குர்ஆன்ஷரீபில் 'பைத்துல்முகத்தஸ்' சம்மந்தமாய் சயிக்கனையாகக் கூறப்பட்டிருக்கிறது. 'புக்தநஸர்' என்பான் 'பைத்துல்முக்த்தஸ்' மீன் படையெடுத்தபோது அதனை தீக்கிரையாக்கினான். அங்குள்ள 'பனூ இஸ்ராயீல்' வர்க்கத்தாரைப் பிடித்து அடிமைகளாகவும் வெள்ளாட்டிகளாகவு மாக்கிக்கொண்டான். அநேக காலம்வரை இப்புண்ணியஸ்தலமும் பாழடைந்து கிடந்தது. ஹஸ்ரத் 'உஸைர்' (அலை.) அவர்களுக்கு அதன் பக்கல் செல்ல வேண்டிய சந்தர்ப்பமேற்பட்டபோது ஹஸ்ரத் அவர்கள் மிக்கவருந்தியவர்களாய், யா அல்லாஹ்! பாழடைந்து போயிருக்கும்படியான இந்த தூய்மைபொருந்திய "பைத்துல் முகத்தஸ்" மறுபடியும் பிரக்யாதிபெற்று விளங்குமா? வெனக் கூறினார்கள். கடைசியாக இந்த வணக்கஸ்தலமும் அல்லாஹ் தஆலாவை வணங்குபவர்களின் கைக்குவந்துவிட்டது. எந்த வகுப்பார் அல்லாஹ் தஆலாவின் கட்டளைக்கு மாறுசெய்கின்றார்களோ அவ்வகுப்பாரில் அல்லாஹ்தஆலா ஒரு மாறுதலை உண்டுபண்ணி அவர்கட்கு உணர்ச்சி ஏற்படும்படி செய்கிறான்.

இக்காலை சில மஸ்ஜிதுகள் 'முத்துவல்லி' என்று சொல்லப்படும் தலைமைக்காரர்களின் அதிகாரத்திலிருந்து வருகிறது. அன்னோர், பள்ளிக்கு வக்பு செய்யப்பட்டுள்ள சொத்துக்களின் வரும்படியை அப்படியே விழுங்கிவிடுகின்றார்கள். சில பள்ளிகள் சில அஞ்சுமன்களின் பிரசிடெண்டு அல்லது செக்ரிடரிகளின் ஆதிக்கத்திலிருந்து வருகிறது. அவர்கள் இந்த அதிகாரம் வாணாள் முழுதிலும் தங்களுக்குரியதென்று எண்ணிக்கொண்டு நாடியதைச் செய்ய முற்படுகின்றனர். ஆகவே, நம் முஸ்லிம் நேயர்கள் தங்கள் முழு பிரயாசையையும் செலுத்தி இதுவிஷயமாக கவனம் செலுத்துவார்களாயின் காரியாதிகள் அழகியமுறையில் நடைபெற்றுவரும். சட்டசபை முதலிய ஸ்தலஸ்தாபங்களுக்கு மூன்று அல்லது ஐந்து வருஷங்களுக்கு ஒருமுறை தலைவரைத் தெரிந்தெடுக்கும் வழக்கம் இருப்பதுபோல மஸ்ஜிதின் பரிபாலனத்திற்காகவும் தேர்தல் நடைபெறுமாயின் நிருவாகமுறைகள் தக்கமுறையில் நடைபெறும். ஆகவே, நம் முஸ்லிம் நேயர்கள் மஸ்ஜிதின் நிருவாக விஷயத்தில் தக்க கவனம் செலுத்தி ஆவன செய்ய முற்படுவார்களாக.



முஸ்லிம்கள் மார்க்க அனுஷ்டானங்களாய தொழுகை நோன்புமுதலிய இக்காரியங்களை தக்க விதமாக நிறைவேற்றுவார்களாயின் மஸ்ஜிதின் பரிபாலன விஷயமும் செவ்வனே நடைபெறுதற்கு ஹேதுவேற்பட்டுவிடும். ஆகவே, எவர் அல்லாஹ்வின் பற்றுக்கொண்டு சாலிஹான அமல் செய்துகொண்டிருக்கின்றாரோ அவர்தான் மஸ்ஜிதின் நிருவாகத்தைத் தக்கமுறையில் நடத்திக்கொண்டு வருவாரென்பது திண்ணம்.

---

## அல்ஹதீது

முஸ்லிம்காள்! முந்திய கூட்டத்தினரில் காணப்பட்டபொறாமை, காமகாரம்என்னும்வியாதி உங்களிலும் பரவ ஆரம்பித்திருக்கிறது. இவை அழித்தொழித்துப் போடக்கூடியவைகளாகும். இவைசன்மார்க்கத்தை அழிக்கக்கூடியதாகும். என் உயிர் எவனுடைய கைவசம் இருக்கிறதோ அவன்மீது பிரமாணமாக, உங்களில் ஈமான் ஏற்படும்வரை சுவனபதியடைய மாட்டீர்கள். நீங்கள் ஒருவரோடொருவர் அன்பு கொள்ளாதவரை ஈமானுடையவர்களாக மாட்டீர்கள். ஆகவே, உங்களுக்கிடையே 'முஹப்பத்'—பிரீதி அன்பு ஏற்படுவதற்கான ஒரு வழியைக் காண்பிக்கின்றேன். அஃதாவது உங்களுக்கிடையே 'ஸலாம்' சொல்வதை அதிகமாக்கிக்கொள்வதாகும். என நபிகள் திலகம் (ஸல்.) அவர்கள் திருவாய்மலர்ந் தருளியிருக்கிறார்கள்.

சத்தியத் தூதர் (ஸல்.) அவர்கள், சஹாபாக்களின் தூய்மை பொருந்திய அக்காலத்திலேயே பொறாமை காமகாரம் தோன்றப் பெறுவதாய் அறிவித்திருக்கிறார்கள். அக்காலம் உண்மை முஸ்லிம்கள் உயிர்வாழும் காலமாகவிருந்தது. இஸ்லாத்தின் உண்மை ஆத்மாக்கள் அவர்களது பிண்டங்களில் மிளிர்ந்து கொண்டிருந்தது. தூய்மை பொருந்திய அக்காலமே பொறாமையைவிட்டு தப்பவில்லையென்றால், கெடுதிகளும் பித்னாக்களும் நிறம்பியுள்ள இக்காலத்தைப்பற்றிக் கூறவும் வேண்டுமோ? இக்காலை தெரியாத மடையர்களென்ன! தெரிந்த மக்களும்கூட பொறாமை காமகாரம் என்னும் தீயில் அகப்பட்டு உண்மை சன்மார்க்கத்தை சம்ஹாரஞ் செய்து வருகின்றனர். ஈமானென்னும் அதினுட்ப இரத்தினத்தை இவைகள் அழித்து நாசமாக்கக்கூடியதென்பதை யாரும் நோட்டமிட்டுப் பார்ப்பதில்லை. இது விஷயத்தைத்தான் மேலே கூறப்பட்டுள்ள ஹதீதில் விளக்கிக் காட்டப்பட்டிருக்கிறது. இதுகாலை முஸ்லிம்கள் பொறாமை காமகாரம் கொள்வதில் தங்களுக்கு நிகர் யாருமில்லையென சிறந்து விளங்குகின்றார்கள். முஸ்லிம்களிலுள்ள அநேக தலைவர்களும் அநேக சீமான்களும் தங்கள் சீமான்தனம், தலைமைத்தனம் இவைகள்மீது மமதை கொண்டு இருப்பதால் இவைகளை ஆண்டவனென கருதியிருக்கின்றார்களாதலின் அன்னோருக்கு அல்லாஹ் ரஸூலுடைய உபதேசங்கள் எங்கிருந்து பிரயோசனம் கொடுக்கப்போகிறது. ஏழைகளோ தங்கள் வறுமையின்மேலீட்டால் பொறாமை காமகாரம் என்னும் கயிற்றால் கட்டுண்டுபோயிருக்கின்றனர். இவ்விரண்டு வகுப்பார்களையும் நாம் அப்படியே விட்டுவிட்டு, தாங்கள் அல்லாஹ்வுக்கு அதிகம் பயப்படுபவர்கள், குர்ஆன் ஹதீதுப்படி நடப்பவர்கள் என்று கூறிக்கொள்பவர்களை கவனிப்போமாகில் அன்னோரில்தான் இத் துர்க்குணங்கள் மிதமிஞ்சி காணப்பட்டு வருகிறது. இது காலத்தின் துர்அதிர்ஷ்ட வசமும் முஸ்லிம்களின் க்ஷீண திசைக்குக் காரணமுமாகவிருக்கிறது. அல்லாஹ்தஆலா இத் துர்குணங்களைவிட்டு முஸ்லிம் நேயர்களைக் காப்பாற்றுவானாக.

நபிகள் பெருமானார் (ஸல்.) அவர்கள் முஸ்லிம்களைநோக்கி, "முஸ்லிம்காள்! சென்றுபோன வர்க்கத்தாரில் காணப்பட்டுள்ள வியாதிகளான பொறாமை காமகாரம் உங்களில் பரவிக்கொண்டு வருகின்றது. அத்துர்ச் செய்கையானது அன்னோரை பலவாறான வேதனையிலாக்கி வைத்தது. பொறாமை கொள்வதென்னும் இவ்வியாதி ஈமானின் ஆணிவேறையே ஆட்டிவைத்து விடுகிறது. இதார்களுக்கேற்

படும் சங்கை மரியாதை கெளரவம் இவைகளைக்கண்டு மனம் சகியாது அவர்களுக்கு மரியாதைக் குறைவு தாழ்மை ஏற்படுவதற்கு முயற்சிப்பதும் பொறாமை கொள்வதின் வகையைச் சேர்ந்ததாகும்" எனக் கூறி, மானிடர்கள் பொறாமை காமகாரம் கொள்வது ஆகிய துர்க்குணங்களை அகற்றி ஒருவரோடொருவர் ஒற்றுமையாக வாழ்வார்களாயின் அதுபொழுதுதான் அன்னோரில் பிரீதி என்னும் முஹப்பத்து அதிகரித்துக்கொண்டு வந்து எல்லோரையும் ஈமானுடையவர்களாக திகழச்செய்யும். ஏகத்துவக் கொள்கை, நாயகம் (ஸல்.) அவர்களது நபித்துவத்தை ஒப்புக்கொள்ளல் ஆகியவைகள் ஈமானுடைய அங்கங்களாக விருந்தபோதினும் பிரீதி அன்னியில் அல்லாஹ்வை அறியவுமுடியாது; ரஸூலுல்லாஹ் (ஸல்.) அவர்களைப் பின்பற்றுவதென்பதும் முடியாது. ஆகவே, ஈமான் ஏற்படுவது முஹப்பது - பிரீதி ஏற்பட்டிருப்பதின்மீது சம்பந்தமுடையதாக விருப்பதால் மக்களிடையே முஹப்பத் - பிரீதி ஏற்படுவதற்கான வழியைக் காண்பித்து உங்களுக்கிடையே 'ஸலாம்' சொல்லிக்கொள்வதை அதிகமாக்கிக் கொள்ளுங்கள்; அதனால் பலவாறான நேசங்களேற்பட்டு பிரீதி அதிகரிக்கும். பிரீதி என்னும் தண்ணீர் ஊற்றி வளர்ப்பது கொண்டு ஈமானென்னும் விருக்ஷம் உற்பத்தியாகி தக்க முறையில் செழித்தோங்கும். அதன் பயனாகச் சுவனபதி யடைவதற்கான சம்மந்தமேற்பட்டு விடும்மென நபிகள் திலகம் (ஸல்.) அவர்கள் தக்க முறையில் விளக்கிக் காண்பித்திருக்கின்றார்கள்.

### மிகுதமாக தெண்டித்து வணங்குவது சுன்னத்துக்கு மாற்றமாகும்

ஒரு மனிதன் ஒருநாளன்று நபிகள்பெருமானார் (ஸல்.) அவர்கள் சமுகம் வந்து அல்லாஹ்வுடைய ரஸூலே! யான் இரவு பகல் முழுவதிலும் அல்லாஹ்த ஆலாவை வணங்குகிறேன். ஒவ்வொரு நேரத்திலும் தெண்டித்து வணங்குவதிலும் நப்ஸை பழக்குவதிலும் காலம் கழித்து வருகிறேன் எனக் கூறினார். அதற்கு நாயகம் (ஸல்.) அவர்கள், உம்முடைய ஜீவனத்திற்குள்ள வழியாதாகுமென வினவினார்கள். அதற்கு அவர், எனக்கு ஓர் சோதரிருக்கின்றார். அவர் காலைமுதல் கஷ்டப்பட்டு கூலி வேலை செய்கிறார். அதன்மூலம் எனது தேவைகளைப் பூர்த்திசெய்து கொள்கிறேன் என அறிவித்தார். அதற்கு நாயகம் (ஸல்.) அவர்கள், 'உமது சோதிரர் உம்மைவிட மேலானவராகும்' என அறிவித்து, யான் தொழுகையையும் நிறைவேற்றுகிறேன், தூங்கவும் செய்கிறேன். நோன்பும் நோற்கின்றேன். நோன்பை விட்டும்விடுகிறேன். பெண்களை விவாகமும் செய்துகோள்கிறேன். எவர் என் நடத்தைக்கு மாற்றஞ் செய்கின்றாரோ அவர் என்னில் நின்றுமுள்ளவரல்ல, என அறிவித்தார்கள்.

ஹஸ்ரத் இமாம் கஸ்ஸாலீ (றஹ்.) அவர்கள் இந்த ஹதீதை விரித்துரைக்குங்கால், இஸ்லாம் ஒரு தகுதியான மார்க்கமாக விருப்பதால் அது ஆத்மாபிவிர்த்தியைக் கற்பித்துக் கொடுப்பதுடன் உலக முன்னேற்றத்திற்கும் பொறுப்பேற்றுக்கொண்டிருக்கிறது. ஆகவே, மனிதன் மூலையில் உட்கார்ந்து தன் சுமையை இதரர்மீது போட்டுவிட வேண்டாமென்று அறிவித்து அல்லாஹ்வின் சட்டதிட்டங்களை முன்னால் வைத்துக்கொண்டு அதிக அபிவிருத்தியடையும்படியும் எவன் கைகால்களை வைத்துக்கொண்டு முடம்போல் உட்கார்ந்து தமது சுமையை இதரர்மீது போட்டு வைத்திருக்கின்றானோ அவன் ரஸூல் (ஸல்.) அவர்களது நடத்தைக்கு மாற்றஞ்செய்தவனாகுமென்றும் கூறியிருக்கிறார்கள்.

அல்லாஹ் தஆலாவை அறிந்துகொள்வதற்கான மார்க்கங்களைத் தேடுவது பெருமானார் (ஸல்.) அவர்களை துயர்வதில் மிக மிக மேலானதாகும். சத்தியத்தூதர் (ஸல்.) அவர்களைப் பார்க்கினும் அல்லாஹ் தஆலாவை அறிந்தவர் கிடையாது. அப்பெருமானார் (ஸல்.) அவர்களே காலக்ஷேபத்திற்காக வியாபாரஞ் செய்வதைத் தெரிந்துகொண்டும் பெண்டிர்களுடன் கூடியிருப்பதை அனுஷ்டித்துவந்தும் இருக்கும்போது சன்னியாசம் புகுவதை எவ்வாறு அனுமதிப்பார்கள். எவன் சக்தியிருக்கும்போது கஷ்டமெடுத்து வேலைசெய்யாது தன்னுடைய சுமையை இதரர்மீது போடுகிறானோ அவன் தக்கவிதவாக அல்லாஹ் தஆலாவை அறிந்தவனாகமாட்டான், என ஹஸ்ரத் ஜுனைத் பக்தாதி (ரலி.) அவர்கள் கூறியிருக்கிறார்கள்.

---



## இஸ்லாம் உலக மதம்

உலகின்கண் பற்பல மதங்கள் இருந்து வந்தன, இருந்தும் வருகின்றன. அவைகளில் ஆண்டவனால் அருளப்பெற்ற மதம் எது என்று பகுத்தறிய அநேக வழிகளுள. சன்மார்க்கம் மானிட கோடிகளுக்கு பொதுவானதாகவும் ஜாதிவித்தியாசம், நிறவேற்றுமை இவைகளைப் பொருட்படுத்தாமல் எல்லோரையும் ஆதரிக்கத்தக்கதாகவுமிருக்க வேண்டும். சட்டதிட்டங்கள் எளியோர் முதல் வலியவர் ஈராகவுள்ள யாவரும் எளிதில் அனுஷ்டிக்கத்தக்கதாகவும் இருக்க வேண்டும். இவ்வாறான அம்ஸம் பொருந்திய மதம் இஸ்லாம் ஒன்றேயாகும். இதனாலேயே மானிடகோடிகள் இதன் பக்கல் ஈசலைப்போல் சாய்ந்துவருகின்றனர். இச்சன்மார்க்கம் உற்பத்தியான அன்று முதல் இன்றுவரை பக்தகோடிகளின் எண்ணிக்கை அதிகரித்துக்கொண்டே வருகிறது.

இவ்வாறு சிறப்புற்றுவரும் இஸ்லாத்தின்மீது புழுக்கங்கொண்ட கிறிஸ்தவப் பாதிரிமார்கள் இல்லாததும் பொல்லாததுமான அநேக அபவாதங்களை சுமத்தி வந்தனர். ஆனால் காலக்கிரமத்தில் கிறிஸ்தவ உலகமே இஸ்லாத்தின் உன்னதக் கொள்கைகளை நன்குணர்ந்து அதன் மஹாத்மியத்தைத் தெரிந்துகொண்டதால் அநேகர் இஸ்லாத்தின் வட்டத்தில் சேர்ந்துகொண்டனர்.

தற்காலை இந்தியாவில் நிகழ்ந்துவரும் காரியாதிகளை கவனியுங்கள்! தீண்டாதார் எனப்படுவோர் பெயரளவில் இந்து மதத்தைச் சேர்ந்தவர்களென மதிக்கப்பட்டு வந்தும் அவர்களை ஜாதிஹிந்துக்கள் கோயில் குளங்களில் அனுமதிப்பதில்லை. நாய்களுக்கு நடக்க உரிமையுள்ள ரஸ்தாக்களிலும்கூட இவர்களுக்கு நடக்க உரிமை கிடையாது. இவ்வாறு சிறுமைப்பட்ட ஆதித்திராவிடர்கள், சமத்துவம், சகோதரத்துவம் அளிக்கத்தக்க மதத்தைத் தேடி ஆராய்ச்சி செய்து இஸ்லாம்தான் இதற்கு ஏற்ற மதம் என்னும் முடிவுக்கு வந்து அதில் சேர்ந்து மானிடருக்கு உரித்தான சகல சுதந்தரங்களையும் அனுபவித்து வருகின்றனர்; பரிசுத்த தேவாலயங்களான மஸ்ஜிதுகளில் புகுந்து நேமநிஷ்டை செய்து வருகின்றனர்.

இதுமட்டுமன்று. கல்வியறிவில் தேர்ச்சி பெற்ற ஆங்கிலேயர், ராஜபுத்திரர், ஜாதி ஹிந்துக்கள் முதலானவர்கள் தாங்களாகவே இஸ்லாத்தில்சேர்ந்து மற்றவர்களையும் இஸ்லாத்தில் சேரும்படி பிரசாரமும் செய்துவருகின்றனர். மலையாளப் பிரதேசத்தில் வதியும் இலக்ஷக்கணக்கான ஈழுவர்களின் தலைவரான ஜனாப் பி. கே. கோபாலன் இஸ்லாத்தைத் தழுவி தங்கள் வகுப்பினருக்கும், மற்றும் 25-லக்ஷம் மக்கட்கும் பிரசாரம் செய்து வருகிறார். இதுபோன்றே தீயவகுப்புத் தலைவர்களிலநேகர் இஸ்லாத்தைத் தழுவியும் இஸ்லாமியப் பிரசாரம் செய்தும் வருகின்றனர்.

ராஜபுத்திர வகுப்பு தலைவர்களில் 82-பேர் இஸ்லாத்தில் சேர்ந்து 25-லக்ஷ ராஜ புத்திரர்களையும் இஸ்லாத்தில் சேர்க்க முயற்சித்து வருகின்றனர்.

காந்திஜியின் மூத்த குமாரரான ஹீராலால் காந்தி தானே ஆராய்ச்சி செய்து பரிசுத்த இஸ்லாத்தைத் தழுவினார். அதனைப்பார்த்து ஒரு ஆங்கிலேயரும், ஓர் ஜப்பானியரும் முஸ்லிமாயினர். ஹீராலால் காந்தி அவர்களுக்கு ஷேக் அப்துல்லாஹ் காந்தி என்ற நாமமிட்டு அழைக்கப்பட்டு வருகிறது. அவர் தமது குடும்பத்தினரையும் குறிப்பாய் தமது பிதா காந்திஜீயையும் மற்ற ஹிந்துக்களையும் இஸ்லாத்தில் சேர்க்க முயற்சித்து வருகிறார்.

இவர் இஸ்லாத்தைத் தழுவியதானது இந்தியாவிலும், ஐரோப்பா, ஆப்ரிக்கா, அரேபியா, ஜப்பான் முதலிய தூர தேசங்களிலும் மிகுந்த பரபரப்பை உண்டுபண்ணியுளது. ஆதலின் எல்லோரும் இது விஷயத்தில் கவனம் செலுத்தி வருகின்றனர். விஷயம் இவ்வாறிருக்க, ஹிந்துக்களின் பத்திரிகைகளில் சில, அவர் குடியர், வெறியர், உதவாக்கரைப் பிள்ளை என அவரை குறைவுபடுத்தி எழுதிற்று. ஒருசமயம் அவரிடம் சில துற்பழக்கம் இருந்திருப்பினும் அதனை இஸ்லாம் சீர்படுத்திவிடும் என்பதில் ஐயமில்லை. என்றாலும் இஸ்லாத்தின்மீது அவர்களுக்குள்ள மனப்புழுக்கம் இவ்வாறு எழுதத்தூண்டிற்று என்பது நிச்சயம்.

இது ஓர் ஆச்சரியமன்று. இச்சென்னையினின்று வெளிவரும் ஓர் காதியானிப் பத்திரிகையும் இதுவிஷயத்தில் தாறுமாறாய் எழுதத் துணிந்து, ஹிந்துப் பத்திரிகைகள் பிரசுரிக்காத அநேக விஷயங்களை அதில் கொணர்ந்து புகுத்தி வெகு விபரீதப்போக்கில் முன்னுக்குப் பின் முரணாகவும் விபரீதத் தலையங்கமிட்டும் பிரசுரித்திருந்தது. அதிலும் காந்திஜீ, ஷேக் அப்துல்லாஹ் காந்தி அவர்கள்மீது இதுபொழுது சுமத்தியுள்ள குற்றங்குறைகளையெல்லாம் அப்பத்திரிகை ஆதரிப்பதுபோன்று அதில்குட்டி மகுடங்களுமிடப்பட்டிருந்தது. அக்குற்றச்சாட்டுகளை அந்த காதியானிப் பத்திரிகை எவ்வளவு தெளிவாகவும் துலக்கமாகவும் பிரசுரித்திருந்ததோ அதைபோன்று எந்த ஹிந்துக்களின் பத்திரிகையிலும் பிரசுரமாகவில்லை. இதனால் ஜனாப் ஷேக் அப்துல்லாஹ் காந்தி இஸ்லாம் மதத்தைத் தழுவியது அப்பத்திரிகைக்குப் பிடிக்காமலிருப்பதால் அதை வெறுக்கிறதென்று யூகிக்கவேண்டியதாக இருக்கிறது. இப்பத்திரிகை முன்னொருசமயம், தாழ்ந்த வகுப்பினர் இஸ்லாத்தில் சேர்ந்துவிடுவதுகொண்டு இஸ்லாத்திற்கு என்ன மகிமை ஏற்பட்டுவிடப்போகிறது என்றும், உலகிலுள்ள அநேகர் இஸ்லாத்தில் வந்துவிடுவது கொண்டு இஸ்லாத்தில் இடமில்லாது நெருக்கமேற்பட்டுவிடும் என்றும், இதரர்கள் இஸ்லாத்தில் சேருவதை ஆதரிக்காது பலவாறாக எழுதிவந்தது.

ஆனால் ஊதியம்பெறும் காங்கிரஸ் ஹிந்துக்களிடம் நல்பேர் வாங்குவான் வேண்டியே, ஷேக் அப்துல்லா காந்தி இஸ்லாத்தைத் தழுவியதையும், இன்னும் தாழ்ந்த வகுப்பு ஹிந்துகள் இஸ்லாம் மதத்தைத் தழுவி வருவதையும் ஏளனம் செய்ய துணிவு கொண்டிருக்கிறதென்பதை நேயர்கள் உணர்வார்களாக.

எவ்விதமும் முயற்சித்து ஷேக் அப்துல்லா காந்தி அவர்களை ஹிந்துமதத்தில் சேர்த்துவிடவேண்டும் என்னும் நோக்கத்துடன் பண்டிட் ஜனார்தனதாஸ் என்பவர் 3-நாள்வரை பம்பாயில் அப்துல்லா காந்தி அவர்களுடன் தர்க்கித்து கடைசியாய் இஸ்லாம்தான் சத்தியசன்மார்க்கம் என்பதை நன்குணர்ந்து முஸ்லிமானார். இவர் முஸ்லிமான விபரம் தெரிந்தவுடன் இவருடைய மேன்பார்வையில் இருந்துவந்த 1200-ஆதிதிராவிடர்களும் உடனே இஸ்லாத்தைத் தழுவினர். ஜனார்தனதாஸ் அவர்கள் ஜாதி ஹிந்துக்கள் மத்தியில் இஸ்லாமியப் பிரசாரம் செய்துவருகின்றார்.



இதுபோன்றே ஐரோப்பா, அமெரிக்கா, ஆப்ரிக்கா, ஜப்பான், சைனா முதலிய நாடுகளிலும் இஸ்லாத்தின் ஜோதி அதிகரித்து வருகிறது. ஈதெல்லாம் முஸ்லிம்கள் செய்துவரும் தீவிரப் பிரசாரத்தின் பயனா? அன்று அன்று. முஸ்லிம்கள் “இஷா அதே இஸ்லாம்” இஸ்லாமியப் பிரசாரவேலையை எந்த அளவுக்குச் செய்யவேண்டுமோ அதில் கிஞ்சித்தும் கவனம்செலுத்தாமல் வாளாவிருந்து வருகின்றனர். பரிசுத்த இஸ்லாத்தின்பால் பொதிந்துகிடக்கும் தெய்வீக சக்தியானது இம்மாதிரி பிரதிபலித்து வருகிறது.

புத்திக்கும், யுக்திக்கும் பொருத்தமான இஸ்லாத்தின் சட்ட திட்டங்களும் அனுஷ்டா பூர்வமான அதின் நடவடிக்கைகளும் உலகமக்களையே தன்பக்கல் ஈர்த்துவருகிறது. எனவே, உலக முழுவதிலுமுள்ளவர்கள் ஒரே மதத்தை அனுஷ்டிப்பதற்கும் இஸ்லாம்தான் மிகமிகப்பொருத்தமான மதமாகும். ஆகவே, மக்கள் இந்த உண்மையை நன்காலோசித்து சிந்தனைசெய்து மானிட முக்திக்கு ஏற்ற சன்மார்க்கம் யாதென்பதைக் கண்டுபிடித்து அதனை அடைய முயற்சிக்க வேண்டியதுஒவ்வொருவர்மீது மேற்பட்ட கடமையாகுமென்பதை தெரிவித்துக்கொள்கிறோம்.

---

# வஹ்தத்துல் உஜூத். அல்லது உள்ளமைப் பொருள் ஒன்றே

(சென்ற மார்ச்சுமீ 195-ம் பக்கத் தொடர்)

கீழே அடித்து விழுந்து மூர்ச்சையாகிக் கிடக்கும், கைஸூ வென்னும் மஜ்னூன் வெகு நேரம் சென்று மயக்கம் தெளிந்தெழுந்த ஒரு சந்தர்ப்பத்தில், சுய உணர்வென்னும் சூரியக் கிரணங்கள் திடும்பிரவேசமாய், அவரின் ஹிருதயத்தைக் கவர்ந்தன. பயித்தியகார ‘கைஸூ’விற்கு தமது பழைய நிலைமைகள் யாவும், ஞாபகத்திற்கு வந்து குவிந்தன. யாம் யார்? எமது லக்ஷியம் யாது? எமது காதலி எங்கிருக்கின்றாள்? யாம் எங்கு வந்து கிடக்கின்றோம்? அடடா இது வென்ன துன்பம்! இக்கானகத்தின் நடுவே நாம் எதற்காக வந்திருக்க வேண்டும்? இங்கு எவ்வாறு வந்தோம்? இது யார் செய்த கொடுமை? என்றெல்லாம் நொடிப் பொழுதிற்குள் நினைத்து சஞ்சலித்துக் கொண்டிருக்கிறார் ‘கைஸூ’ வென்னும் பயித்தியக்காரர்.

ஞானோதயம் பெற்ற ‘கைஸ்’ சிந்தித்துக் கொண்டிருக்கும், அவ்வொரு நொடிப்பொழுதிலாவது, அவரைக் கவர்ந்து நின்ற காதற் கருமேகம் கலைந்துபோனதென்றா கருதுகின்றீர்கள்? இல்லை, இல்லை. அது, கட்கட, கடகடவென்று இடித்து அவரின் அடிவயிற்றைத் தாக்கிக்கொண்டும், மின்மினு, மினுமினுவென்று மின்னி அவரின், மனதைக் கீறிப் பிளந்துகொண்டுமிருந்தது. மேலும் ‘கைஸூ’வின் இரத்தக் கடலான தாமரைக் காயிலே குவிந்து காலூன்றி அக்கடல் நீரை நன்றாய்க் குடித்தெழுந்த அக்காதற் காளமேகம், எப்பொழுதும் பொழிந்து கொட்டிக்கொண்டுதானிருக்கும். இல்லையென்றால் அவரின் இருவிழிகளின் கீழே தோன்றியோடும் ஆறுகள் அவ்வளவு பெருக்கைக் கொண்டிருக்க முடியாதல்லவா!

நாட்டினிலுறையும் நாயகி ‘லைலா’வை நேசித்த நாம், காட்டில் இனிக்கிடப்பது சரியன்று வென்பதை ஒருவாறு உணர்ந்துகொண்டார் மஜ்னூன். உதறி எழுந்தார்; ஊரைநோக்கி அதிவேகமாய் செல்லவாரம்பித்தார். அப்பப்பா! கைஸூவின் கனவேகத்தை யாரால் கணிக்க முடியும்? இமைப்பொழுதிற்

குள் இமயகிரியை தாண்டிவிடுவார் போலிருக்கிறது வேகம். இவ்வாறு வேகமாய் அவர் இப்பால் செல்ல செல்ல, சுய உணர்வின் சுடர் அவரை விட்டகன்று அப்பால் மறைந்து துரிதமாய்ப் போய்க்கொண்டிருந்தது என்றாலும் அச்சுடர் முழுவதும் மங்கிமறைந்து போய்விடவில்லை. எனவே, அக் 'கைஸு' வென்னும் பெரியாரை இப்பொழுது காதற் கடலிலே முங்கி ஆழ்ந்துபோனவரென்றோ, அல்லது உணர்வென்னும் மிதப்பின்மீது அமர்ந்து அக்கடலில் மிதப்பவரென்றோ, சொல்லுவதற்கில்லை. இவ்விரு நிலைமைகளுக் கிடையே 'மஜ்னூன்' தள்ளாடி தத்தளித்துக்கொண்டு வரும் அத்தருணம், மேய்ந்து கொண்டிருக்கும் சில மரைகள், அவர் கண்ணுக்கு தென்பட்டன. அட, அடா, அப்பொழுது அவர் பட்ட பாட்டை என் கேட்கின்றீர்கள்! அவரால் நிற்கவும் முடியவில்லை. நடந்து செல்லவும் மனமில்லை. அங்கு மேய்ந்து கொண்டிருப்பவை, ஒரு நொடியிலே மரைகளாய் அவர் கண்ணிர்க்குத் தெரிகின்றன? மறுநொடியிற் மரைகள் மறைந்து பூங்கொடி 'லைலா' வின் பிரசன்னமாய் தோற்றுகிறது. 'லைலா,வை காணும் போது மரைகள், மறைந்து மடிகின்றன. மரைகள் தென்படும் போழ்து லைலா மறைகின்றாள்.

கபடமற்ற 'கைஸ்' தமது காதற் கடலின் ஆழத்தில் மூழ்கும்பொழுது அவரின் அகக்கண், நெற்றிக் கண்ணை மிகைத்து விடுகிறது. மூழ்கிப்போன அவர் மேலே வந்து உணர்வென்னும் தெப்பத்தைப்பற்றிப் பிடிக்கும் போது, அவரின் வெற்றிக்கண் நிலவி, அகக்கண், அடக்கப் பெருகிறது. இதனால்தான் மஜ்னூன் என்பாருக்கு அங்கு மேய்ந்து கொண்டிருப்பவை, ஒரு வேளையில் 'லைலா' வாகவும் மறுவேளை, மரையாகவும் தென்படலாயின ஏனென்றால் அவரின் அகத்தில் 'லைலா' விற்கன்றி வேறு யாருக்கும் இடமில்லை; அவரின் மனது எப்பொழுதும் அவளையே நினைத்து சிந்தித்துக் கொண்டிருப்பதாகுமென்பதை முன்னமேயே நீங்கள் அறிந்து வந்திருக்கிறீர்கள். நேரிலுள்ள பொருள்களை நமக்கெடுத்து காட்டுவதுதான் நெற்றிக் கண்களின் நிரந்தர வேலை என்பதை எல்லோரும் அறிந்திருக்கின்றனர். 'கைஸு'வின் காதற் கதையிலே கவனிக்கவேண்டிய பகுதிகள் அனேகமுள்ளன வென்றாலும், இப்பொழுது நமக்கு மிக மிக வேண்டியதும் நாம் எடுத்துக்கொண்ட 'வஹ்தத்துல்உஜூத்' என்பதை நன்கு விளக்கி காட்டக் கூடியதுமான முக்கிய பாகம், இப் பகுதியேயாம். எனவே, இங்கே யாம் குறித்த விஷயங்கள் யாவையும் பன்முறை படித்தேனும் நன்றாய் நினைவிற் பதியவைத்துக் கொண்டீர்களென்றால் மேலே செல்லுங்கள். கதைக்கு காலுண்டா வென்று சிலர் கழறுவதுண்டு. ஆனால் இவர்கள் அவர் கூறிய கவிகளை கேட்டதில்லை போலும். அக்கவிகள், இவரின் கதையை நன்கு விளக்கி காட்டுகின்றன. வேண்டுமானால் இன்னும் கொஞ்சம் மேலே போய் பாருங்கள்.

மாறி மாறித்தோற்றும் 'லைலா' வின் பிரசன்னத்திற்கும் மரைகள் தாமென்னும் எண்ணத்திற்கும் மத்தியில் மாட்டிக்கொண்டு விழிக்கின்றார் கைஸ். உண்மையிலேயே அங்கவர் தடுமாற்றங் கொண்டுவிட்டார். காலடி எடுத்து வைக்கவும்கூட நினைவில்லாமற் நின்று கலங்கினார். பிறகு நன்றாய் கண்ணைக்கொண்டு ஊன்றி கவனித்துப் பார்த்தார். மேய்ந்துகொண்டிருப்பவை மரைகள்தாம், என்னும் முடிவிற்கு வந்துவிட்டார். இனி அங்கு நிற்பாரா 'கைஸ்'. 'லைலா' அல்லவா அவரின் லட்சியம். நாட்டை நோக்கி நடக்க வாரம்பித்தார். கூட்டமாய் மேய்ந்துகொண்டிருந்த மரைகள் கருத்து, அகன்ற தங்கள் விழிகளைக்கொண்டு தம்மை கூர்ந்து பார்த்து கலைவதைக்கண்ட கைஸு வென்னும் மஜ்னூன், உண்மையாகவே ஏமார்ந்து போய்விட்டார். அவர் என்ன செய்வார் பாவம். ஒருபுறம் அங்கு 'லைலா' அவரின் மனதை கொள்ளைகொண்டு விட்டாள்; மறுபுறம் இங்கு மரைகள், தங்கள் நீண்ட கழுத்தோடுங் கூடிய உயர்ந்த சிரங்களையும் குஞ்சம்போன்ற குறுகிய வால்களையும் ஆட்டி நடந்து, மெல்லிய கால்களால் கெல்லிக் கெல்லி கலைந்தோடும் காட்சி கண்ணை பறிக்கின்றது. களங்கமற்ற இக்காதலருக்கு தோன்றிய சந்தேகத்தால் திகைத்துப் போனார். இச்சந்தேகத் திகைப்பின் விளைவால் அவர் அம்மரைகளை நோக்கி வினவிய ஒரு அரபிக் கவியின் சாரம் இதுவே:—ஒகே! கானின் மரைகாள்! அல்லாஹ்வின்மீது ஆணையாக, நீங்கள் எமக்கு உண்மையை உரைத்துவிட வேண்டும். என்ன! எமது (காதலியாம்) லைலாவென்னும் நங்கை உங்கள் இனத்தில் உதித்தவளா? அல்லது லைலா, மனிதவர்க்கத்தை சார்ந்தவளா? மஜ்னூன் இப்பொழுது, 'லைலா' வென்பாள் மரைகளை சார்ந்தவள்தானா? அல்லது மனித இனத்தில் பிறந்தவளா, என்னும் ஒருவகை சந்தேக மயக்கத்தில் இருக்கின்றார் என்றாலும், மரையினம் வேறு, மனிதவர்க்கம் வேறு என்றுணரும் தெளிவோடு திகழ்கிறார் என்பது இங்கு குறிப்பிடத்தக்கது. சரி, வாருங்கள் இவரின் கதையில் இன்னும் சற்று மேலே செல்லுவோம்.

இவ்வாற்றான அனேகமனேக மலைகள் போன்ற கொடிய நிலைமைகளையும் துன்பங்களையும் அதிவேகமாய்க் கடந்து சென்றுவந்த மஜ்னூன், மதங்கொண்ட யானைபோல் ஊரினுட் புகுந்தார். வெகுகாலமாய் காணாமற்போயிருந்த 'கைஸ்' அன்று கதர் ஆடை கட்டி இருந்தாரென்று கருதிவிடாதீர்கள். அவரின் மெல்லிய மேனியிற் படிந்து மேடிட்டிருக்கும் புழுதியின் மேல் முளைத்தெழும்பிய புற்பூண்டுகள் தாம் அவரின் ஆடை. கிடங்கான அவரின் கண்களை கிணறென மதிக்கலாம்; இவரின் இமைகளோ, ஏத்தங்கள். அவைகளால் இரைத் தோட்டப்பெரும் கண்ணீர் தாரைகளென்னும் ஓடைகள் வழியாகச் சென்று, அன்னாரின் மேனியிலுள்ள பூண்டுகளுக்குப் பாய்ந்து கொண்டிருப்பதாய்ப் பகரலாம் என்றால், அவரைக் காண்பதே ஒரு காட்சியாயிருக்குமென்று சொல்லவும் வேண்டுமோ. அவர் தமது ஊரிலுள்ள பிரஜைகள் யாவருக்குமே, பொதுவாய் ஒரு அபூர்வ காட்சியளித்தார். எனவே அவரின் ஊர் பிரவேசப் பவனியிலே ஏகமான திரள் காணப்பட்டது. அய்யோ! பாபம், பரிதாபம். பாபம் பாபமென்பர் பலர், 'கைஸு' வின் கோர காட்சியைக் கண்டு கண்கலங்குவர் சிலர், காதல் என்றால் இவரின் காதலே காதலென்று போற்றுவர் ஒரு சிலர், 'கைஸு' வைப்போல் நாம் கண்டதுமில்லை, கேட்டதுமில்லை இதுவென்ன காமாட்டிக்காதல் என்று தூற்றுவர் வேறு சிலர்.

பல்வேறு பாமர மக்களும் பக்தகோடிகளும் புடைசூழ சென்றுகொண்டிருக்கும் 'கைஸ்' கடைத்தெருவில் கண்ட காட்சி யாது? கருநிறமுடைத்தாய நாய் ஒன்று கூட்டத்தின் நடுவே சிக்குண்டு, காள், க்காள் என்று கதறுவதைத்தான், அங்கவர் கண்ணுற்றார். கலங்கிய கண்களையுடைய 'கைஸ்' கருநிறமுடைய அந்நாயை கட்டிப் பிடித்தணைத்தார். முத்தி முகர்ந்தார். இக்கண்றாவி காட்சியை காணும் எவர்தாம் வியப்படையாதிருப்பர். எனவே, அக்குழுவினர், குலுங்க குலுங்கச் சிரித்தனர். ஆனால், மதிமயங்கிய மஜ்னூன் எனப்படுவார் இப்பொழுது முன்போல் தமது உணர்ச்சியின் உச்சஸ்தானத்தை விளக்காமல் சும்மா இருந்துவிட்டாரென்றா நினைக்கின்றீர்கள்; இல்லை, இல்லை. அன்னாளின் (லைலாவின்) அன்பிற்காக கருநிறமுடைய ஒவ்வொரு பொருளையும் நான் நேசிக்கின்றேன். எனவே, அன்னாளின் அன்பின் விளைவினாலேயே, கருத்த நாய்களைக் கூட நேசிக்கலுற்றேன். என்னும் ஒரு கவியைக்கொண்டு, சிறித்துக்கொண்டிருந்த அத்தனை பேர்கள் கண்களிலிருந்தும் இரத்தக் கண்ணீர் சொட்டுமாறு செய்துவிட்டார், அப்பயித்தியகார 'கைஸ்'. என்னே! அப்பயித்தியத்தின் கூறு இருந்தவாறு!!

நேயர்காள்! நமது கதாநாயகர், 'கைஸு'வின் கவிகள் இவ்வளவுதான் என்று நினைத்துவிடாதீர்கள். இன்னும் அனேக கவிகள் உண்டு. உண்மையில் அவைகள் ஒவ்வொன்றும் இவ்வாற்றான ஒப்பற்ற கற்பனைகளைக் காட்டக்கூடியதாகவே அமைந்திருக்கின்றன. அக்கவிகள் யாவையும் இங்கு பொறிப்பது அசாத்தியமாகுமென்பதைக் கருதி விடுத்தோம்.

இதுவரை நாம் எழுதிவந்த கதையில் நீங்கள் நன்கு கவனித்தறிய வேண்டியது யாதென்றால், 'கைஸ்', என்னும் காதலர் தமது கருமமே கண்ணாயினர், என்பதேயாம். 'இதனால் அவர் லாப நஷ்டத்தை மறந்தார்; ஊன் உரக்கமென்ன, உடைகளையும்கூட இழந்தார். உண்மைக்கும் உலகப் போக்கிற்கும் மாறாய் நடக்கலுற்றார்; நங்கை 'லைலா' விற்காக ஒரு வேளையில் நாயை கட்டிப் பிடித்திழுத்தார்; மறுவேளை மரைகளை 'லைலா'வென்று மதித்தார். மதியற்ற மஜ்னூன் என்றும் இன்று வரை பட்டம் பெற்றார்; என்றாலும் "மஜ்னூனெ பனீ ஆமிர்" என்னும் 'கைஸ்' தமது லட்சியத்தில் லகித்துப் போனதினாலேயே இத்துணை எதார்த்த விரோதங்களுக்கும், ஏளனச் சின்னங்களுக்கும் இலக்காயினர் என்பதைக் கருதிப் பார்க்கும்பொழுது கல்மனமும் கரைந்துவிடுகிறது. அவரது உணர்ச்சி அடைந்திருந்த உச்சஸ்தானத்தை அண்ணார்ந்து பார்ப்பவர்களினது சிரம், அடித்து விழுந்து அங்கு பணியக் கூடியதாயிருப்பதில் யாருக்கு, என்ன சந்தேகம்! எனவே மஜ்னூன் எல்லாராலும் மன்னிப்பளிக்கப் பெறுகிறார், என்பதென்ன அல்லாஹ்வின் நல்லருளிர்க்கும் ஆளானார் என்பதை இற்றைக்கு ஆயிரம் வருடங்களுக்குமுன்

தினவரும், ஹிஜ்ரி முன்னூற்றைம்பத்திமூன்றாம் ஆண்டிலே 'வபாத்தாகி' (இறந்து) அடக்கம் பெற்றவரும், ஆழ்ந்த அறிவையும், கடந்த கல்வியையும் தாங்கியவரும், அவ்லியாக்களின் சங்கத்திலே அங்கம் பெற்ற பெரியாருமான ஹஸ்ரத் "அபுல்ஹுசைன் பந்தாரெ" 'ஷீருஸீ' (ரஹ்.) அவர்கள் கூறிச் சென்றிருக்கின்றனர், என்றால் விண்ணின்கீழ் மண்ணுள்ளவரை 'கைஸு' வென்னும் 'மஜ்னூன்' (ரஹ்.) அவர்களின் மகிமைக்குரிய கீர்த்திப் பிரதாபம் மறைந்துபோவதாயில்லை. இது ஒரு பக்கல் இருக்கட்டும்,

மஜ்னூன் 'ரஹ்மதுல்லாஹி அலைஹி' அவர்கள் 'இஷ்கு' (காதல்) என்பதன் கடைசி எல்லையை அடைந்திருந்தமையால், அன்னாரின் உணர்ச்சிக்கும், அவருக்கும் பேரும் கீர்த்தியும் கிடைத்துவிட்டது உண்மை. அப் பெரியாரின் உணர்ச்சி, நமது உள்ளத்தையும் கொள்ளைகொள்ளக் கூடியதாயிருக்கின்றது என்றாலும், அவ் வுணர்ச்சியின் எழுச்சியால், அன்னாரில் ஒன்றின்பின் ஒன்றாய்த் தோன்றி உலவிக்கொண்டிருந்த-உண்மையற்ற-ஊசலாட்டங்களையும், எதார்த்த வினோத நிலைமைகளையும் எவராலும் மறைத்துவிட முடியாது. இன்னிலைமையில், அவரின் நினைவு, நிலைமை யாவும் எதார்த்தமான உண்மைகள்தாம், என்று சிலர் இயம்புவார்களெனில் அவர்களைப்பற்றி நீங்கள் என்ன நினைக்கின்றீர்கள். அவ்வறிவிலிகளைப்பற்றி யாமொன்றும் அறைய விரும்பிலேம். நீங்களே ஒரு முடிவிற்கு வந்து சேருங்கள். அது தொலையட்டும் துன்பம். இனி நாம் இரங்கிய பாட்டையிலே நடந்துசெல்லுவோம் வாருங்கள்!

(தொடரும்.)

---

# நாயகம் (ஸல்.) அவர்களது திருமணங்கள்

இஸ்லாத்தின்பால் விரோதிகள் செய்யும் பல்வேறு ஆக்ஷேபனைகளில் நாயகம் (ஸல்.) அவர்கள் பலதார மணம் செய்ததும் ஒன்றாகும். "நாயகம் (ஸல்.) அவர்கள் பலதாரங்களை மணந்ததால் இஸ்லாம் மதம் பலதார மணத்தை ஆதரிக்கிறது" என்று பொதுவாக அவர்கள் ஆக்ஷேபனை செய்வதுடன் மட்டும் நில்லாமல் நாயகம் (ஸல்.) அவர்களது மா, தூய வாழ்க்கையில் மாசு ஏற்பட வேண்டும் என்றும் அவ்விரோதிகள் விரும்புகின்றனர். ஆதலின், நாயகம் (ஸல்.) அவர்கள் பலதார மணம் புரிந்துகொண்ட விஷயங்களைப்பற்றி இங்கு சிறிது விவரிப்போம்.

## உம்முல்மூமினீன் ஹஜ்றத் கதீஜத்துத் தாஹிரா (றலி.) அவர்கள்

நபிகள் நாயகம் (ஸல்.) அவர்கள் 25 வயதுவரை மிகவும் பரிசுத்தமான ஏகாந்த வாழ்க்கையை நடத்திவிட்டு அப்பால் தங்களைப்பார்க்கினும் 15 வயது மூத்தவரும், இரண்டு கணவர்களுக்கு ஒருவருக்குப் பின் ஒருவராக வாழ்க்கைப்பட்டு மக்களைப் பெற்றவருமான ஹஜ்ரத் கதீஜா தாஹிரா (றலி.) அவர்களை விவாகம் செய்துகொண்டார்கள். இவ்விவாகம் நாயகம் (ஸல்.) அவர்களுக்கு முதலாவது விவாகமாக இருப்பதுமல்லாமல், பெண் வீட்டாரே முதலாவதாக இவ்விவாகத்திற்குத் தூது அனுப்பி நாயகம் (ஸல்.) அவர்களை வலியக் கேட்டுக் கொண்டதுமாகும்.

## உம்முல்மூமினீன் ஹஜ்றத் ஸௌதா பின்து ஜம்ஆ (றலி.) அவர்கள்

நாயகம் (ஸல்.) அவர்கள் தங்களுடைய முதல் மனைவியவர்களுடன் 25 வருஷ காலம் ஏகபத்தினி விரதத்துடன் இல்லறம் எனும் நல்லறம் நடத்தியபின் முதல் மனைவியார் இவ்வுலக வாழ்வைத் துறந்தார்கள். பின்னர் குழந்தைகளையும் வீட்டுக் காரியங்களையும் கவனித்துக்கொள்ளத்தக்க துணைவியின் அவசியமிருந்ததால் ஹஜ்றத் கௌலாபின்து ஹக்கீம் (றலி.) என்ற மாதரசியின் சிபார்சின்பேரிலும் முயற்சியின்பேரிலும் ஹஜ்றத் ஸௌதா (றலி.) அவர்களை விவாகம் செய்துகொண்டார்கள். இவ்வம்மையார் விதவையாக இருந்தார். இவர் பூர்வீக முஸ்லிம்களில் ஒருவர். இவ்வம்மையாரும் நாயகம் (ஸல்.) அவர்களை மணந்துகொள்ளும்போது அதிக வயதடைந்தவராக இருந்தார்.



## உம்முல்மூமினீன் ஹஜ்றத் ஆயிஷா ஸித்தீக்கா (றலி.) அவர்கள்

நாயகம் (ஸல்.) அவர்கள் மூன்றாவதாக ஹஜ்றத் ஆயிஷா ஸித்தீக்கா (றலி.) அவர்களை மணந்தார்கள். இவரது மணத்தைப்பற்றி இறைவன் முற்கூட்டியே நாயகம் (ஸல்.) அவர்களுக்கு நற்செய்தி யனுப்பி இருந்தான். 'ஜுபைறுப்னு முத்இம்' என்பவரின் புதல்வருக்கு ஹஜ்றத் ஆயிஷா ஸித்தீக்கா (றலி.) அவர்களை மணம் செய்விப்பதாக நிச்சயிக்கப்பட்டிருந்தது. ஆனால், இவரை மணந்துகொள்வதால் தமது வீட்டில் இஸ்லாம் புகுந்துவிடும் என்றஞ்சி இம்மணத்தை வேண்டாம் என்று மறுத்துவிட்டனர். என்றாலும் நபிகள் நாயகம் (ஸல்.) அவர்கள் ஹஜ்றத் ஆயிஷா ஸித்தீக்கா (றலி.) அவர்களை மூன்றாவதாக விவாகம் செய்துகொண்டார்கள். இவ்விவாகம் திரு மக்காவில் நடைபெற்றது. ஆனாலும், மதீனாவிற்கு வந்த பிறகுதான் குடும்ப வாழ்க்கை நடத்தப்பட்டது. நபிகள் நாயகம் (ஸல்.) அவர்களது வாழ்க்கைத் துணை நல்லார்களில் இவர் ஒருவர்தான் கன்னி யழியாத ஸ்திரீ.

## உம்முல்மூமினீன் ஹஜ்றத் ஹப்ஸா (றலி.) அவர்கள்

இவ்வம்மையார் இரண்டாவது கலீபா ஹஜ்றத் உமர்பாறூக் (றலி.) அவர்களது புதல்வியாவார். மக்கத்துக் குறைஷியருக்கும் முஸ்லிம்களுக்கும் பத்று என்ற ஸ்தலத்தில் நிகழ்ந்த மார்க்க யுத்தத்தில் இவரது கணவர் முஸ்லிம்கள் சார்பாக யுத்தம் செய்து ஷஹீதாகி விட்டார். தமது புதல்வி விதவையாக இருப்பதைப்பற்றி ஹஜ்றத் உமர்பாறூக் (றலி.) அவர்கள் வருத்தமடைந்தார்களாதலின், நபிகள் நாயகம் (ஸல்.) அவர்கள் ஹஜ்றத் உமர்பாறூக் (றலி.) அவர்களது தியாகத்தையும் உண்மையையும் பாராட்டுவதற்கறிகுறியாக அவ்வம்மையாரை மணந்துகொண்டார்கள்.

## உம்முல்மூமினீன் ஹஜ்றத் ஜைனப் (றலி.) அவர்கள்

இவ்வம்மையாரின் கணவர் உஹதுச் சண்டையில் முஸ்லிம்கள் சார்பாக இஸ்லாத்தைக் காக்கும்பொருட்டு யுத்தம் புரிந்து ஷஹீதாகி விட்டார். ஆகவே, நபிகள் நாயகம் (ஸல்.) அவர்கள் இவரை மணந்து கொண்டார்கள். ஆனாலும், இத்திருமணத்திற்குப் பின் இவ்வம்மையார் சில மாதங்கள்தாம் ஜீவித்திருந்தார். இவர் ஏழைகள்பால் இரக்கமுற்றவராதலால் இவருக்கு "உம்முல் மஸாக்கீன்" என்று சிறப்புப் பெயர் ஏற்பட்டது.

## உம்முல்மூமினீன் ஹஜ்றத் உம்முஸல்மா (றலி.) அவர்கள்

இவர் நபிகள் நாயகம் (ஸல்.) அவர்களது பால்குடி சகோதரரான அப்துல்லாஹ் (றலி.) அவர்களுக்கு வாழ்க்கைப்பட்டிருந்தார். இவர் உஹதுச் சண்டையில் காயமடைந்து பின்னர் வபாத்தாகி விட்டதால், இவ்வம்மையார் விதவையானார். நபிகள் நாயகம் (ஸல்.) அவர்கள் இவரை மணந்துகொண்டார்கள். இவ்வம்மையார் தமது கணவர் ஹஜ்றத் அப்துல்லாஹ் (றலி.) அவர்களுடன் அபிசினியாவுக்கும், மதீனாமுனவ்வராவுக்கும் ஹிஜ்றத்துச் செய்தவர்.

## உம்முல்மூமினீன் ஹஜ்றத் ஜைனப் பின்துஜஹஷ் (றலி.) அவர்கள்

இவ்வம்மையார் நபிகள் நாயகம் (ஸல்.) அவர்களது பூப்பி (அத்தை)யின் புதல்வியாவர். நாயகம் (ஸல்.) அவர்கள் தங்களது குடும்பத்தில் பிறந்த தங்கள் மைத்துனியான இவ்வம்மையாரை தங்களிடமிருந்து விடுதலையடைந்தவரும், தமது புதல்வர் என்று பிறரால் அழைக்கப்பட்டவருமான ஹஜ்றத் ஜைத் (றலி.) அவர்களுக்கு விவாகம் செய்வித்தார்கள். பிறகு, இவ்விருவருக்கு மிடையில் ஒற்றுமை ஏற்படாததால் விவாக விலக்குச் செய்யப்பட்டது. பிறகு அல்லாஹு தஆலாவின் கட்டளைப்படி நாயகம் (ஸல்.) அவர்கள் இவ்வம்மையாரை மணந்துகொண்டார்கள்.

## உம்முல்மூமினீன் ஹஜ்றத் ஜுவைரிய்யா (றலி.) அவர்கள்

இவ்வம்மையார் பனீமுஸ்தலக் என்னும் கோத்திரத்துத் தலைவரின் புதல்வியாவர். 'மிர்ஸீஉ' என்ற இடத்தில் நடைபெற்ற யுத்தத்தில் இவரது கணவர் கொல்லப்பட்டதும் இவர் கைதியானார். பிறகு, இவ்வம்மையார் காலித்துப்னு கைஸ் (றலி.) என்பவருடைய பாகத்தில் கொடுக்கப்பட்டார். இப்பெரியார்

9 ('ஔக்கியா' தங்கம் கொடுத்தால் விடுதலை செய்வதாக வாக்களித்ததன்பேரில் இவ்வம்மையார் நபிகள் நாயகம் (ஸல்.) அவர்களிடம் வந்து விஷயத்தை அறிவித்துப் பணஉதவி தேடினார். அதற்கு நாயகம் (ஸல்.) அவர்கள் அவருக்குப் பணஉதவி செய்து விடுதலை செய்ததுடன் அவ்வம்மையாரை திருமணமும் செய்துகொண்டார்கள்.

### உம்முல்மூமினீன் ஹஜ்றத் உம்முஹபீபா (றலி.) அவர்கள்

இவ்வம்மையார், அபூஜஹ்லுக்குப் பிறகு குறைஷிக் காபிர்களுக்குத் தலைமைவகித்து நபிகள் நாயகம் (ஸல்.) அவர்களை எதிர்த்துப் பலமுறை யுத்தம்செய்த அபூஸுப்யானுடைய புதல்வி. இவரது தந்தை இஸ்லாத்திற்குப் பெரும் விரோதியாக இருந்தும் இவர் ஆரம்பக் காலத்திலேயே இஸ்லாத்தைத் தழுவி அபிசினியா தேசத்திற்குத் தமது கணவருடன் ஹிஜ்றத்துச் செய்தார். இவரது கணவர் அங்கு சென்றபின் கிறிஸ்துவ மதத்தைத் தழுவிப் பிரிந்துபோய் விட்டதால் இவ்வம்மையார் மட்டிலும் இஸ்லாத்தில் உறுதியாக இருந்தார். இச்செய்தி நாயகம் (ஸல்.) அவர்களுக்குத் தெரிய வந்தவுடன் அத்தேசத்து அரசரான நஜ்ஜாஷியைத் தமது பிரதிநிதியாக நியமித்து நாயகம் (ஸல்.) அவர்கள் இவரை மணந்துகொண்டார்கள். ஆகவே, ஹிஜ்ரீ 7-வது வருஷத்தில் இவ்வம்மையார் அபிசினியாவிலிருந்து மதீனமாநகருக்கு வந்தார்.

### உம்முல்மூமினீன் ஹஜ்றத் மைமூனு (றலி.) அவர்கள்

இவ்வம்மையார் நபிகள் நாயகம் (ஸல்.) அவர்களது சிறிய தந்தையான ஹஜ்றத் அப்பாஸ் (றலி.) அவர்களது வாழ்க்கைத் துணைவியின் சகோதரியாவார். இவர் இதற்குமுன் மஸ்ஊதுப்னுஅம்று என்பவருக்கு வாழ்க்கைப்பட்டு விவாகவிலக்குச் செய்யப்பட்டவர். பிறகு 'உமைறுத் தக்பீ' என்பவரை மணந்து விதவையானவர். ஹஜ்றத் அப்பாஸ் (றலி.) அவர்களது தூண்டுதலின்பேரில் நாயகம் ஸல்.) அவர்கள் இவ்வம்மையை விவாகம் செய்து கொண்டார்கள்.

### உம்முல்மூமினீன் ஹஜ்றத் ஸபிய்யா (றலி.) அவர்கள்

இவ்வம்மையார் ஹஜ்றத் ஹாரூன் அலைஹிவஸ்ஸலா மவர்களது சந்ததியில் பிறந்தவர். இவரது தந்தை பனூநளீர் என்ற யூதக் கூட்டத்தாரின் தலைவராவர். இவரது மாதா பனூகுறைலா என்ற யூதக் கூட்டத்துத் தலைவரின் புதல்வி. கைபரில் நடந்த சண்டையில் இவரது கணவரும், சகோதாரும், தந்தையும் இறந்ததுடன் இவரும் கைதியாக வந்தார். பின்னர் நாயகம் (ஸல்.) அவர்கள் இவரை மணந்துகொண்டார்கள்.

### இத் திருமணங்களால் ஏற்பட்ட நன்மைகள்.

நபிகள் நாயகம் (ஸல்.) அவர்கள் தங்கள் 25-வது வயதின் வாலிபப் பருவத்தில் தங்களைப் பார்க்கினும் 15 வருஷத்திற்கு மூத்தவரும் விதவையும், இதர கணவர்களுக்கு மக்களைப் பெற்றவருமான ஒருவரை மணந்து 25 வருஷ காலம் ஏகபத்தினி விரதத்தை அனுஷ்டித்து வந்திருக்கிறார்கள். அதற்கப்புறமும் ஒரு விதவையை மணந்து 5 வருஷ காலம் வரை ஏகபத்தினி விரதத்திலேயே இருந்திருக்கிறார்கள்.

இதற்குப் பிறகு அரபிக் கோத்திரங்கள் பலவற்றுடனும் நாயகம் (ஸல்.) அவர்கள் யுத்தம் செய்யவேண்டியதிருந்தது. குறைஷியர்கள் யுத்தம் செய்யத் தொடங்கியது மட்டுமில்லாமல் இதர அறபிக் கோத்திரங்களையும் தூண்டிவிட்டனர். இவர்களைத் தவிர யூதர்களும்கூட முஸ்லிம்களை வேரறுக்கக் கங்கணம் கட்டிக்கொண்டிருந்தனர். ஆதலின், நபிகள் நாயகம் (ஸல்.) அவர்கள் இக்கோத்திரங்களின் எதிர்ப்பைச் சமாளிப்பதற்கான திட்டங்களைச் செய்யவேண்டியதிருந்தது.

நபிகள் நாயகம் (ஸல்.) அவர்கள் மதீனாவிற்கு வந்தபிறகு செய்த விவாகங்களில் ஹஜ்றத் ஜைனப் உம்முல்மஸாக்கீன் (றலி.), உம்முஸல்மா (றலி.) ஆகிய இவரும் இஸ்லாத்திற்காக உண்மையாய் உழைத்துத் தங்கள் உயிர்களை மார்க்க யுத்தத்தில் தியாகம் செய்த ஸஹாபிகளின் விதவைகளாவார்கள். தவிரவும் இம்மாதரசிகளும் உண்மைத் தியாகிகளாகவும், இஸ்லாத்திற்கு அருந் தொண்டாற்றியவர்களாகவுமிருந்தார்கள். ஹஜ்றத் உம்முஸல்மா (றலி.) அவர்கள் நம் பிராட்டிமார்களில் ஹஜ்றத் ஆயிஷா ஸித்தீக்கா (றலி.) அவர்களுக்கு அடுத்தபடியாக மார்க்க விஷயங்களையும் நுட்பங்களையும் அதிகம் அறிந்தவர்களாக இருந்தார்கள். ஆதலின், அவர்கள்பால் நாயகம் (ஸல்.) அவர்கள் தங்கள் அனுதாபத்தைத் தெரிவித்து, ஆதரிக்கும்பொருட்டு அவர்களை மணந்துகொண்டார்கள்.



உம்முல்மூமினீன் ஹஜ்றத் ஹப்ஸா (றலி.) அவர்களது கணவரும் பத்றுச் சண்டையில் இஸ்லாத்திற்காகத் தமது உயிரைத் தியாகம் செய்தவர். ஹஜ்றத் உமர்பாறூக் (றலி.) அவர்கள் இஸ்லாத்திற்காக எத்துணை தியாகங்களைச் செய்தார்கள் என்பது உலகறிந்த விஷயம். ஆதலால், ஹஜ்றத் உமர் (றலி.) அவர்களது புதல்விக்கு ஏற்பட்ட இத்துக்கத்தில் அனுதாபம் காட்டி அவர்களுக்கு ஆறுதலளிப்பதற்காகவும், அக்குடும்பத்தைத் தங்களது குடும்பத்துடன் நெருங்கிய பந்தப்படுத்துவதற்காகவும் நாயகம் (ஸல்.) அவர்கள் அவ்வம்மையாரை விவாகம் செய்துகொண்டார்கள்.

ஹஜ்றத் உம்மு ஹபீபா (றலி), மைமூனு (றலி.) ஆகிய இருவருடைய திருமணங்கள் அறபிய சமூகத்திலுள்ள யுத்தங்களை நிறுத்தி அவர்களை இஸ்லாத்திற் சேர்ப்பதற்குப் பேராதரவாக இருந்தன. ஹஜ்றத் உம்முஹபீபா (றலி.) அவர்கள் அபூஸுப்யானின் புதல்வியாவார். இவர் அபூஜஹ்லுக்குப்பின் குறைஷியரின் தலைவராக இருந்து பலமுறை யுத்தம் புரிந்தவர். ஆதலின், இம்மாதை விவாகம்செய்து சம்மந்தப்படுத்திக்கொள்வதன்மூலம் இந்த யுத்தங்களை நிறுத்தவேண்டும் என்ற நோக்கத்தின் பேரில் அபிசினியாவில் அவ்வம்மையார் இருக்கும்போதே மிகவும் அவசரமாக திருமணம் செய்துகொண்டார்கள். அன்றியும் இவ்விருவரும் நாயகம் (ஸல்.) அவர்களது ஆதரவுக்கும் உதவிக்கும் தகுதியானவர்களாகவும் இருந்தனர்.

உம்முல்மூமினீன் ஹஜ்றத் ஜுவைரிய்யா (றலி.), ஹஜ்றத் ஸபிய்யா (றலி.) ஆகிய இருவரும் நாயகம் (ஸல்.) அவர்களது பகைவர்களின் தலைவர்களது புதல்விகளாவார்கள். பகைவர்கள் தோல்வியுற்றபின் அவர்களைக் கேவலப்படுத்துவதற்கு நாயகம் (ஸல்.) அவர்கள் விரும்பமாட்டார்களாதலின் அவர்களுக்குரிய கௌரவத்தை அளித்துவந்தார்கள். ஹஜ்றத் ஜுவைரிய்யா (றலி.) அவர்களை நாயகம் (ஸல்.) அவர்கள் விவாகம் செய்தவுடன் அந்தக் கபீலாவிலுள்ள இதர ஸ்திரீகளுக்கெல்லாம் முஸ்லிம்கள் விடுதலை யளித்துள்ளார்கள். இவ்வம்மையாரின் தந்தையும், சகோதரும் இஸ்லாம் மதத்தைத் தழுவினர். இப்பால் அந்தக் கபீலா முழுவதுமே இஸ்லாத்தைத் தழுவி விட்டது.

எனவே, நாயகம் (ஸல்.) அவர்கள் செய்த திருமணங்களில் கன்னிப் பெண்ணாக இருந்தவர் ஹஜ்றத் ஆயிஷா ஸித்தீக்கா ஒருவர்தான். அவரும் நாயகம் (ஸல்.) அவர்கள் 50 வயதைக் கடந்த பின்னரே "உம்முல்மூமினீன்" என்ற பேரைப் பெற்றார். அக்காலத்தில் சாதாரணமாக ஏனைய ஜனங்கள் வாலிபப் பருவத்தைக் கடந்து வயோதிகப் பருவத்திற்கு வரும் சமயமாகும். ஆதலின், நாயகம் (ஸல்.) அவர்கள் ஸ்திரீகளின்மீது காமங்கொண்டு பல மனைவியரை மணப்பதென்றால் அவர்களது வாலிப காலத்தில் அவர்கள் நினைத்த குடும்பத்தில் நினைத்த கன்னிகைகளைக் கலியாணம் செய்துகொள்ளச் சந்தர்ப்பமும் வசதியுமிருந்தது. அன்றியும் நாயகம் (ஸல்.) அவர்கள் திரு மக்காவில் இஸ்லாம் மதத்தைப் பிரசாரம் செய்துகொண்டிருந்த காலத்தில் அக்குறைஷியர்கள் தாங்களாகவே முன்வந்து பெண்ணையும் பொன்னையும் தருவதாகக் கூறியும் அதனை நாயகம் (ஸல்.) அவர்கள் மறுத்துவிட்டதையும் நாம் கவனிக்கவேண்டும்.

நபிகள் நாயகம் (ஸல்.) அவர்களது வாழ்க்கைத் துணைவியர்கள் மூலமாக இஸ்லாம் மத சம்பந்தமான அநேகம் பிரச்சினைகளைப்பற்றி ஆயிரக்கணக்கான ஹதீதுகள் ரிவாயத்துச் செய்யப்பட்டிருக்கின்றன. அநேகம் சஹாபிகள் மத சம்பந்தமாகத் தங்களுக்கேற்படும் அநேகம் சந்தேகங்களை இவ்வம்மையார்களிடம் கேட்டுத் தெரிந்துகொண்டிருக்கிறார்கள். ஆதலின், இத்தியாதி விஷயங்களைச் சிந்தித்துப் பார்க்குமிடத்து நாயகம் (ஸல்.) அவர்களது திருமணங்கள் அறபி நாட்டிலுள்ள யுத்தங்களை ஒழித்து, அறபிக் கோத்திரங்களுக்கிடையில் நெருங்கிய சம்பந்தத்தை ஏற்படுத்திக் கொள்வதற்காகவும், இஷாஅத்தே இஸ்லாத்திற்காகவுமென்று நன்கு புலப்படுகின்றது. எனவே, இஸ்லாமிய விரோதிகள் நாயகம் (ஸல்.) அவர்களது திருமணங்களைப்பற்றிக் கூறும் ஆக்ஷேபனைகள் தவறானவைகள் என்பதும், குரோத எண்ணத்தால் கூறப்படுபவைகள் என்பதும் இச்சிறிய வியாசத்திலிருந்து நன்கு தெரிய வரும் என்பதை நேயர்களுக்கு அறிவித்துக் கொள்கிறோம்.

---

# முஸ்லிம்களின் வீழ்ச்சிக்குக் காரணமென்ன ?

(அல்லாமா அமீர் ஷக்கீப் அர்ஸலான்)

(சென்ற மாத 216-ம் பக்கத் தொடர்ச்சி)

முஸ்லிம்களது வீழ்ச்சிக்கு அநேகம் காரணங்களிருந்தபோதினும் அவைகளிற் சில கீழே குறிப்பிடப்படுகின்றன :—

### அறியாமை

முஸ்லிம்களது வீழ்ச்சிக்குக் முதற்காரணம் அறியாமையாகும். 'சிர்க்கா' என்னும் காடிக்கும், சாராயத்திற்குமிடையில்கூட வித்தியாசத்தை உணர்ந்துகொள்ள முடியாதபடி அவ்வளவு அறியாமையிலிருக்கிற பாமர ஜனங்கள் சகலவிதமான வீணான காரியங்களையும் ஒப்புக்கொள்வதற்குத் தயாராக இருக்கின்றனர் என்பதிலும், தங்களிடம் தர்க்கம் பேசுபவர்களுக்கு பதில் சொல்லச் சக்தியில்லாமலிருப்பதன்காரணமாக அந்நியர்களின் ஏமாற்றத்தில் சிக்கிக்கொள்கிறார்கள் என்பதிலும் கிஞ்சிற்றும் சந்தேகமில்லை.

### சோற்பப்படிப்பு

தவிரவும், சில முஸ்லிம்களிடம் சொற்பப் படிப்பு இருப்பதும் மற்றொரு காரணமாகும். இது அறியாமையைப் பார்க்கினும் மகா கெட்டது. ஏனெனில், பாமர ஜனங்களைத் திருத்தி நேரான வழியிற் கொண்டுவருவதற்குத் தகுந்த திறமையும் சமர்த்துமுள்ள ஒரு ஆலிம் முன்வந்து, அவரது ஹிதோபதேசத்தைப் பொதுஜனங்களும் ஒப்புக்கொள்ள வாரம்பித்துவிடுவார்களாயின், தங்களுக்குச் சொற்ப படிப்புத்தானிருக்கிறது என்பதையும்கூட அறியாத அரைப் படிப்புக்காரர்கள் தங்களது தர்க்கவாதத்திற்குமுன் எவருடைய சொல்லையும் ஒப்புக்கொள்வதில்லை. அரை வைத்தியம் உயிருக்கு ஆபத்து, அரைமுல்லா ஈமானுக்கு ஆபத்து என்ற பழமொழி இவர்கள் விஷயத்தில் பொருத்தமாக இருக்கிறது.

### ஒழுக்கவழுக்கு

முஸ்லிம்களது ஒழுக்கம் வழுக்கடைந்ததும் அவர்களது வீழ்ச்சிக்கு மற்றொரு காரணமாகும். திரு குர்ஆன் நமக்குப் போதித்ததும், நமது முன்னோர்கள் உயர்பதவிகளையடையக் காரணமாக இருந்ததுமாய நல்லொழுக்கங்களை நாம் முற்றிலும் கைவிட்டு விட்டோம். ஒரு சமூகத்தை விழுப்பம்செய்து முன்னேற்றமடையச்செய்வதில் கல்வி கலை ஆகியவைகளைப் பார்க்கினும் சிறந்த நல்லொழுக்கங்கள் அதிகம் பிரயோஜனகரமானவை என்பது எவருக்கும் மறைந்த விஷயமன்று. "ஒரு சமூகத்தில் நல்லொழுக்கம் இருக்கும்வரை அந்தச் சமூகம் உயிருள்ள சமூகமாக இருக்கமுடியும். அச்சமூகத்தில் ஒழுக்கம் வழுக்கடைந்துவிடுமாயின் அந்த சமூகம் தானாக வீழ்ந்துவிடும் என்று பிரபல வித்துவானொருவர் கூறி இருப்பது முற்றிலும் உண்மையேயாகும்.

### படித்தவர்களும் அரசர்களுமின்மை

முஸ்லிம்களது வீழ்ச்சிக்கு அவர்களிலுள்ள படித்தவர்களும், அரசர்களும் பலஹீனமாக இருப்பதும் ஒரு முக்கிய காரணமாகும். பிரஜைகள் தங்களுக்கு ஊழியம் செய்வதற்காகவே சிருஷ்டிக்கப்பட்டிருக்கின்றனர் என்றும், அவர்களைத் தங்கள் இஷ்டப்படி எப்படி வேண்டுமாயினும் நடத்துவதற்குத் தங்களுக்கு உரிமை இருக்கிறதென்றும் அரசர்கள் கருதிக்கொண்டிருக்கின்றனர். இந்த எண்ணம் அவர்களது மூளையில் வெகு தூரத்திற்கு ஆழமாகப் பதிந்துவிட்டது. இவ்வரசர்களது செய்கையைச் சீர்திருத்தி அவர்களை நேரான வழிக்குக் கொண்டுவர ஒருவர் முயற்சிப்பாராயின் எவ்விதத் தயக்கமுமின்றி அவரைக் கொலைசெய்துவிடுவதற்கு அவர்கள் அஞ்சுவதே இல்லை



இந்த அநியாயக்கார அரசர்களுக்குச் சில படித்தவர்களும் உடந்தையாக இருப்பது மிகவும் விசனகரமானதாகும். உண்மையாளர்கள், சத்தியவான்கள் ஆகியவர்களைக் கலகக்காரர்கள் என்று கூறி, அவர்களைக் கொன்றுவிடும்படி ஆலோசனை கூறுகின்றனர். அரசர்களுக்கு நேரான வழியைக் காண்பிப்பது அறிஞர்களது கடமை என்பதாக இஸ்லாம் மதம் கட்டளையிட்டிருக்கிறது. முற்காலத்திலிருந்த இஸ்லாமிய அரசாங்கங்களில் அறிஞர்கள் இக்காலத்திலுள்ள பார்லிமென்ட் சபைகள் செய்யும் காரியத்தைச் செய்துகொண்டிருந்தனர். இவ்விதமான ஜனங்கள் முஸ்லிம்களில் இருந்துகொண்டிருந்த காலம்வரை முஸ்லிம் அரசர்களும் கலீபாக்களும் பகிரங்கமாக அக்கிரமஞ் செய்யத் துணியவில்லை. இக்காலத்தில் அம்மாதிரியான ஜனங்கள் மிகக் குறைந்துவிட்டனராதலின், தவறான முறைகளும் கெடுதல்களும் நாளுக்கு நாள் அதிகரித்துக்கொண்டு வருகின்றன. முஸ்லிம்கள் பின்னடைந்து கொண்டும், விரோதிகள் முன்னேற்றமடைந்துகொண்டுமிருக்கின்றனர்.

### கோழைத்தனமும் பயங்கொள்ளித்தனமும்.

முஸ்லிம்களில் பயங்கொள்ளித்தனமும் கோழைத்தனமும் இருப்பது முஸ்லிம்களது வீழ்ச்சிக்கு மற்றொரு முக்கிய காரணமாகும். முஸ்லிம்கள் உலகிலுள்ள எல்லா தேசத்தவர்களைப் பார்க்கினும் சிறந்த வீரப் பராக்கிரமமுள்ளவர்களென்று கியாதி பெற்றிருந்தனர். மரணத்தை அவர்கள் திரணமாக மதித்தனர். ஒரு முஸ்லிம் தன்னந்தனியே பத்துப்பேரை எதிர்த்து ஜெயித்துக்கொண்டிருந்தனர். சிலசமயங்களில் நூறு பேர்களையும்கூட எதிர்த்திருக்கிறார்கள். ஆனால், இற்றை நாளில் மரணம் என்ற பெயரைக் கேட்பதற்கும்கூட நடுங்குகின்றனர். இஸ்லாம் இருக்கும்போது அத்துடன் இருதயத்தில் பயமும் ஒன்று சேர்ந்திருக்கமுடியாது என்பது உண்மையேயாகும். அதிலும், ஆச்சரியமென்னவெனில், முஸ்லிம்களைப் பகைத்து அக்கிரமம்செய்யும் விரோதிகளுக்கு மரணத்தைப்பற்றி அத்துணை பயமில்லை. விரோதிகள் தங்கள் சமூகத்திற்காகவும் தேசத்திற்காகவும் மரணத்துடன் எவ்விதமாக விளையாடிக்கொண்டிருக்கிறார்கள் என்பதையும், இதன்பலனாக அவர்கள் என்னென்ன விதமான வெற்றிகளை அடைகின்றனர் என்பதையும் முஸ்லிம்கள் கண்ணால் பார்த்துக்கொண்டு வெட்கமடைவதுமில்லை, பாடங் கற்றுக்கொள்வதுமில்லை. "நீங்கள் விரோதிகளைப் பின்றொடர்ந்து செல்வதில் சோம்பலாயிருக்காதீர்கள். உங்களுக்கு கஷ்டமேற்பட்டிருக்கிறதென்றால் அவர்களுக்கும் உங்களைப்போல் கஷ்டமேற்பட்டிருக்கிறது. ஆனால், அவர்கள் அல்லாஹ்வினிடம் ஆதரவு வைக்காததை நீங்கள் ஆதரவு வைத்திருக்கிறீர்கள்" என்று இறைவன் திரு குர்ஆனில் கூறி இருப்பதையும் முஸ்லிம்கள் சிந்தித்துப் பார்ப்பதில்லை.

பயங்கொள்ளித்தன்மையுடன் நம்பிக்கையை இழந்துவிடுவதும் முஸ்லிம் பொது ஜனங்களிடம் மிகவும் அதிகமாகப் பரவி இருக்கிறது. எனவே, முஸ்லிம்கள் பரங்கியரைப்பார்க்கினும் மிகவும் கீழ்த்தரமாக இருப்பதாகவும், அவர்களுடன் யுத்தம்செய்து வெற்றிக்கொள்ள முடியாதென்றும், அவர்களுடன் யுத்தம் செய்வதால் நஷ்டமடைவதைத் தவிர வேறு நன்மை எதையும் அடையமுடியாதென்றும் எண்ணிக்கொண்டிருக்கின்றனர். இவ்விதமான பயங்கொள்ளித்தனத்தின் காரணமாகப் பரங்கியர்களுக்கு முஸ்லிம்களிடம் பல வெற்றிகள் கிடைத்திருக்கின்றன. பழைய காலத்து வழக்கம் முற்றிலும் மாறி சில பரங்கியர் எண்ணத் தொலையாத முஸ்லிம்களை இந்நாளில் ஜெயித்துக்கொண்டிருக்கிறார்கள். பயங்கொள்ளிகள், கோழைத்தனத்தை புத்திசாலித்தனம் என்பதாக நினைத்துக்கொண்டிருக்கிறார்கள். இது புத்திசாலித்தனமுமன்று; விவேகமான காரியமுமன்று; இது அற்பர்களின் ஆயுதமாகும் என்பதை அவர்கள் உணரவேண்டும்.

ஒரு காலத்தில் 20 முஸ்லிம்கள் பார்ஸிலோனாவிலிருந்து பிரான்சின் தென்பகுதியாகிய பராக்ஸீனமாவுக்கு வந்து, மலைப் பிரதேசத்தைக் கைப்பற்றி ஒரு கோட்டையையுங் கட்டிக்கொண்டு அங்கிருந்து வந்தனர். பிறகு, நாளடைவில் அவர்களது எண்ணிக்கை ஒரு நூறுவரையில் பெருகியபின் சட்டப்படியுள்ள ஒரு அரசாங்கத்தை ஏற்படுத்தி பிரான்சின் தெற்குப் பிரதேசத்துடன் இத்தாலியின் வடபாகத்தையும் கைப்பற்றிக்கொண்டனர். அங்கு முஸ்லிம்கள் ஒரு நூறு பேர்கள்தானிருந்தனர். ஆயினும், அக்கம்பக்கத்து அரசாங்கங்களெல்லாம் அவர்களுடன் சிநேகம் பாராட்டிக்கொண்டும் உறவுகொண்டாடிக்கொண்டுமிருந்தன.

ஆல்ப்ஸ் மலையின் சிகரமும், பிரான்சு, இத்தாலி ஆகிய தேசங்களிலுள்ள மலைப்பிரதேசத்திற்குச் செல்லும் ராஜபாட்டைகளும் இவர்கள் கைவசமிருந்தன. அவ்வழியாகச் செல்லும் வியாபார தாவளத்தினர் அனைவரும் இவர்களுக்கு வரி கொடுத்துக்கொண்டிருந்தனர். இச்சிறிய முஸ்லிம் கூட்டத்தினர் வரவர அபிவிருத்தியடைந்து மத்திய ஐரோப்பாவிலுள்ள ஸ்விட்ஜர்லாந்தின் ஏரியையும்கூடக் கைப்பற்றிக்கொண்டனர். இவ்வண்ணம் 95 வருஷ காலம் அவர்கள் ஆட்சிபுரிந்து ஐரோப்பிய அரசாங்கங்களெல்லாம் ஒன்றுகூடி ஏகமாகச் சேர்ந்து எதிர்த்தபோது பலகாலம்வரை அவைகளை எதிர்த்து யுத்தம்செய்து கம்பீரமாக அழிந்தனர். அதுசமயம் ஐரோப்பா முழுவதையும் எதிர்த்து நின்ற அறபியர் எண்ணிக்கையில் 1500-க்கு அதிகமில்லை.

### சில அறியா மாக்களின் சந்தேகங்கள்.

நீங்கள் கூறுவனவனைத்தும் மெய்யேயாகும். ஆனால், அது எக்காலத்தில்? ஐரோப்பியரிடம் யுத்தத்திற்கு வேண்டிய நவீன கருவிகள், துப்பாக்கிகள், பீரங்கிகள், டாங்கிகள், ஆகாயவிமானங்கள் முதலியன இல்லாத காலத்தில்தான் அவைகள் நிகழ்ந்தன; இப்பொழுதோவெனில், நவீன சயன்ஸின் முன்னேற்றம் இவ்வபிப்பிராயங்களனைத்தையும் முற்றிலும் மாற்றிவிட்டன என்று சில அறியாமாக்கள் கூறுகின்றனர். இவ்வாறு கூறுவது அறியாமையும் மூடத்தன்மையுமாகும். அக்காலத்திலும் முஸ்லிம்களது பகைவர்கள் கொஞ்சங் கருவிகளும் வசதிகளும் மாத்திரமுள்ளவர்களாக இருக்கவில்லை. சரித்திரப் புத்தகங்களைப் புரட்டிப்பார்த்தால் பூர்வ காலத்திலும்கூட யுத்தத்திற்கென விசேஷ கருவிகள் இருந்தனவென்பதும், இக்காலத்தில் மெஷின் பீரங்கிகள் முதலியவைகள் செய்யும் வேலையை அவைகள் அக்காலத்தில் செய்துகொண்டிருந்தன என்பதும் தெரியவரும். தவிரவும், இந்த ஆயுதங்களும், கருவிகளும், தளவாடங்களும் மனத்தைரியத்தையும் ஊக்கத்தையும் உண்டாக்கவிடமாட்டா. மனதைரியமும் ஊக்கமும்தான் இவைகளை உண்டுபண்ணுகின்றன. இவைகள் கோழையராகவும் ஊக்கமில்லாதவராகவும் இருப்பவரிடம் இருந்தால் இவைகள் எவ்விதப் பிரயோஜனமும் செய்யமாட்டா; இவைகளுக்கும் கற்களுக்குமிடையில் எவ்வித வித்தியாசமுமில்லை.

இவைகள் கிரியாம்சையில் வெற்றிபெற வேண்டுமாயின் தற்காலமுள்ள நவீனக் கல்விகள் மிகவும் அவசியமாகும். இக்காலை முஸ்லிம்களிடம் இவைகளில்லாததால், பரங்கியர்களை எதிர்க்க அசக்தர்களாக இருக்கிறார்கள் என்று சிலர் கூறமுடியும். முஸ்லிம்களிடம் துணிவும், விவேகமும் இருப்பின் புதிய கலைகளும், நவீனமாய்க் கண்டுபிடிக்கப்பட்டவைகளும் அவர்களுக்கு அருமையல்ல. ஜப்பான் தேசத்தார் 1886-ம் வருஷம் வரையில் கீழ் நாட்டினரைப்போல் பிற்போக்கடைந்திருந்தனர். ஆனால், அவர்கள் ஐரோப்பியர்களைப் பின்பற்றி அவர்களைப்போல முன்னேற்றமடைய விரும்பி அவர்களது கலைகளையும் தொழில்களையும் கற்று 50 வருஷ காலத்திற்குள் ஐரோப்பியருக்குச் சமமாகி விட்டனர். முஸ்லிம்கள் பலவான்களாகி அவர்களுடன் தோள்சேர்த்து நிற்க விரும்புவார்களாயின் அவர்களுக்கும் இந்த வழி திறந்துதானிருக்கிறது. இதற்காக அவர்கள் மதத்தை விட்டுவிட வேண்டுமென்பதோ மத ஆசாரங்களைக் கைகழுவிவிட வேண்டுமென்பதோ அவசியமில்லை. ஜப்பானியர் இவ்வளவு முன்னேற்றமடைந்தும் அவர்கள் தங்களது ஆசாரங்களையோ மதத்தையோ விட்டுவிடவில்லை.

மேலும், முஸ்லிம்கள் நவீன ஆயுதங்களையும் தளவாடங்களையும் சேர்த்துக்கொள்ள விரும்பி, அவைகள் அவர்களுக்குக் கிடைக்காமற் போன காலமுமில்லை. முஸ்லிம்களுக்கு இருக்கிற குறை எல்லாம் உறுதியின்மையும் ஊக்கமின்மையுமேயாகும். இவர்களிடம் உறுதியும் ஊக்கமும் உண்டாகிவிடுமாயின் எல்லாத் தளவாடங்களும் சகல கருவிகளும் இவர்களுக்கும் கிடைத்துவிடும் என்பதிற் சந்தேகமில்லை. முஸ்லிம்கள் தளவாடங்களைச் சேர்க்க இன்றைக்கு விரும்பினாலும் அடுத்த தினத்திலேயே அவர்களுக்கு எல்லாத் தளவாடங்களும் கிடைத்துவிடுமென்பது உண்மையில்லையா? ஆனால், ஆயுதங்களை வாங்குவதற்குப் பணம்கொடுக்க வேண்டியதாக இருக்கிறது. முஸ்லிம்கள் பணங் கொடுக்கவும் தயாராக இல்லை; ஜப்பானியரைப்போல் நடந்துகொள்ள விரும்பவுமில்லை. பணச் செலவில்லாமல் ஆயுதம் வாங்கிக்கொள்ளவும், ஆயுதங்களில்லாமல் வெற்றியடையவுமே முஸ்லிம்கள் விரும்புகின்றனர். இப்படி ஆசைப்படுவது முட்டாள்தனமேயாகும்.



இவ்வித நிலைமையில் ஆயுதமில்லாத கணக்கற்ற முஸ்லிம்கள் ஆயுதமுள்ள சில பரங்கியர்களை எதிர்க்க முடியாமல் தோல்வியடைந்து பின்வாங்குகின்றனர். இதன் பலனாக முஸ்லிம்கள் பரங்கியரின் பெயரைக்கேட்ட மாத்திரத்தில் நடுங்குகின்றனர். சில இடங்களில் முஸ்லிம்கள் பரங்கியரிடம் சரண்புகுந்து,

"நீங்கள் பலஹீனமடைந்து விடாதீர்கள். இன்னும் கவலை கொள்ளவும் செய்யாதீர்கள். நீங்கள் மூமின்களாக இருப்பின் (மற்றவர்களைப் பார்க்கினும்) நீங்கள்தான் உயர்ந்தவர்களாயிருப்பீர்கள். உங்களுக்கு நஷ்டமேற்பட்டிருக்கிறதென்றால், உங்கள் பகைவர்களுக்கும்தான் நஷ்டமேற்பட்டிருக்கிறது. மேலும், நாம் காலத்தை இவ்விதமாக ஜனங்களிடம் மாற்றிக்கோண்டே இருக்கிறோம்" என்ற தெய்வத் திருமறையின் கட்டளையையும் மறந்து விடுகிறார்கள்.

நீங்கள் செல்வத்தைப் பகைவர்களுக்காகச் சேர்த்து வைக்காதீர்கள். ஏனெனில், பகைவர்கள் உங்களை ஜெயித்தால் உங்களது ஜீவியத்தையும் உங்களது செல்வத்தையும் அவர்கள் பிடுங்கிக் கொள்வார்கள். நீங்கள் சேகரித்து வைக்கிற உங்கள் பணம் உங்களுக்கு எவ்விதப் பிரயோஜனத்திற்கும் உதவாது என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள். "உலகில் செல்வம் குறைந்தவர்களுக்கு மகிமையுமில்லை. மகிமை குறைந்தவர்களுக்குச் செல்வமுமில்லை" என்பதாக ஒரு புலவர் கூறியிருப்பதுபோல் மகிமையைக் குறைத்துக்கொண்டு செல்வத்தைச் சேமித்து வைப்பதில் பிரயோஜனமில்லை. முஸ்லிம்கள் செல்வத்தையும் ஜீவியத்தையும் நியாயமில்லாத முறையில் காப்பாற்ற முயலுகின்றனர். ஆதலின், அவ்விரண்டையும் அவர்கள் இழந்து விடுகின்றனர்.

இப்பொழுது முஸ்லிம்களது நிலைமை அன்று எம்பிரான் நபிகள் நாயகம் (ஸல்.) அவர்கள் திருவாய்மலர்ந்தருளிய ஹதீது ஷரீபுக்கு ஒத்ததாக இருக்கிறது. அந்த ஹதீது வருமாறு:—

"பசித்த மனிதர்கள் சாப்பாட்டின்மீது பாய்ந்து விழுவதுபோல உங்கள்மீது பிற சமூகத்தார் விழும்காலம் ஒருசமயம் வரும்" என்று நாயகம் (ஸல்.) அவர்கள் கூறினார்கள். அதற்கு ஜனங்கள் "அக்காலத்தில் நமது ஜனத்தொகை குறைவாக இருக்குமா?" என்று நாயகம் (ஸல்.) அவர்களிடம் கேட்டார்கள். அதற்கு நாயகம் (ஸல்.) அவர்கள் "அன்று, நீங்கள் அதிகமிருப்பீர்கள். ஆனால், உங்களது நிலைமை பிரவாகத்திற்குமேலிருக்கும்படியான புல்லைப்போலிருக்கும்" என்று கூறினார்கள். அதற்கு ஜனங்கள் "இம்மாதிரி ஏன் ஏற்படும்?" என்று நாயகம் (ஸல்.) அவர்களை வினவினர். அதற்கு நாயகம் (ஸல்.) அவர்கள் "உங்களில் "வஹன்" உண்டாகிவிடும் என்று கூறினார்கள். "வஹன்" என்பது என்னவென்பதாகக் கேட்டதற்கு நாயகம் (ஸல்.) அவர்கள் "பணத்தின்மீ தாசையேற்படுவதும் மாணத்தின்மீது பயமேற்படுவதுமாகும்" என்று கூறினார்கள் என்பதே.

எனவே, இவ்விரு காரியங்களும்தான் முஸ்லிம்களது வீழ்ச்சிக்கு மூலகாரணங்களாகும். ஆகவே, முஸ்லிம்கள் மரணத்திற்கு அஞ்சுவதால் பகைவர்களை எதிர்ப்பதில்லை. பணத்தாசையின் மிகுதியால் அல்லாஹ்வின் பாதையில் ஷஹீதாகுபவர்களுக்குப் பணவுதவி செய்வதில்லை. இப்பொழுது முஸ்லிம்களது எண்ணிக்கை குறைவாக இல்லை. ஆனால், அவர்களில் ஜௌஹர் (ரத்தினம்) எதுவுமில்லாவிடில் எண்ணிக்கை அதிகமாக இருப்பதில் பிரயோஜனமென்ன? எவர் உலகத்தை அதிகம் நேசிக்கிறாரோ அவர் அதன் இன்பங்களையும் பிரயோஜனங்களையும் அடைய முடிவதே இல்லை என்பதும், உயிர்வாழ்வதின்மீது அளவிற் கதிகமான பற்றுள்ளவர் தன்னைத்தானே கஷ்டங்களுக்குட்படுத்திக் கொள்கிறார் என்பதும் உலகறிந்த விஷயங்களாகும். இதனால்தான் "ஜீவியத்தையும், செல்வத்தையும், உலகிலுள்ள எல்லாப் பொருள்களையும் அல்லாஹ்வின் கட்டளைக்கு முன் அற்பமாக மதிக்கவேண்டும்" என்னும் நம்பிக்கையை இழந்துவிடக்கூடாது என்றும், பொறுமையும் உறுதியும் வேண்டுமென்றும் திருகுர்ஆன் நமக்குக் கட்டளையிட்டிருக்கிறது. எனவே, முஸ்லிம்கள் உண்மையான முஸ்லிம்களாக இருக்கவேண்டுமென்று இறைவன் விரும்புகிறான். உண்மையான முஸ்லிமாக இல்லாதிருக்கும்போது திரு குர்ஆனில் இறைவன் கூறியுள்ள வாக்குறுதிகளை அவன் நிறைவேற்ற வேண்டுமென்று கேட்க நமக்கு என்ன உரிமை இருக்கிறது.

(தொடரும்.)

# நாம் முன்னேறுவ தெங்ஙனம்?

[சித்தயங்கோட்டை மௌல்வி S.N. ஹுஸைன் முஹம்மது ஸாஹிப் (பாக்கவி) வரைவது.]

இவ்வவனி தோன்றிய நாள்தொட்டு ஒவ்வொரு மக்கள், ஒவ்வொரு காலத்தினர், ஒவ்வொரு தேசத்தினர் யாவரும் தத்தம் முன்னேற்றத்தை விரும்பாமலில்லை. அம்முன்னேற்றத்திற்குரிய சாதனங்களைச் செய்து பார்க்காதவருமில்லை. தங்கள் முன்னேற்றத்திற்கு நம் மக்களில் ஒரு சிலர் மதாநுஷ்டானத்தைக் கையாண்டு வந்தனர். ஒரு சிலர் பொருளாதாரத்தைத் துணையாகக் கொண்டனர். ஒரு சிலர் தொழிலபிவிருத்தியைக் காரணமாகக் கண்டனர். வேறு சிலர் நாஸ்திகமே சிறந்ததெனச் செப்பி வந்தனர். மற்றுமொரு சிலர் சமூகாபிவிருத்தி, சமூக ஒற்றுமை இவைகளே சாலச் சிறந்ததென சாற்றிவந்தனர். சாற்றியும் வருகின்றனர்.

இறுதியாய் ஈங்கு எது சரி? எது சரியல்ல? என்ற வாதத்திற்கிடுபட யான் தயாரில்லை எனினும் நமது நோக்கம் நாம் முன்னேற்றமடைவதற்குரிய சாதனங்கள், துறைகள் யாவை? என்பதேயாகும். முன்னேற்றமென்பது ஒவ்வொருவரிலும் அமையப்பெற்ற உணர்வும் உணர்ச்சியுமேயாகும் என்பது யாவரும் அறிந்த நிதரிசனமாகும்.

மதாநுஷ்டானம், தெய்வபக்தி, பொருளாபிவிருத்தி, தொழில், கலை, நாகரீகம், முதலிய சகல வழிகளிலும் ஈடுபட்டு கடந்துசென்றாலொழிய நாம் நமது லக்ஷியம் என்ற முன்னேற்றத்தை அடைதல் முடியாது.

இதுவன்றி ஒவ்வொரு வர்க்கத்தினரும் தத்தம் அறிவிற்கெட்டியவாறு மேற்கூறிய யோக்கியதாம்சங்களில் ஒரு சிலர் ஒன்றையும், மற்றுமொரு சிலர் வேறொன்றையும், தத்தம் நோக்கிற்கிணங்க கையாண்டு வருவதில் தங்கள் லக்ஷிய நிலையை அடைவாரென்பது அரிதினும் அரிது.

அன்பீர்! அகில மவதரித்த நாள்தொட்டு இப்பிரபஞ்சத்தில் தோன்றியும் மறைந்தும் எண்ணற்ற மதங்கள் காணக் கிடக்கின்றன. அவைகளில் புராதனமாய் காணக் கிடக்கும் மதங்கள் இந்துமதம், புத்தமதம், கிறிஸ்து மதம் இம்மூன்றுமேயாகும். சரித்திரங்களில் ஹிந்துமதம் கோடிக்கணக்கான வயதையுடையதாயும், புத்தமதம் 40 நூற்றாண்டையுடையதாயும், கிறிஸ்துமதம் ஈராயிர வாண்டுகளையுடைய ஆயுளுள்ளதாயும் கூறப்பட்டுள்ளன. பெரிய வேதங்களும் பெரிய ஆயுளுமுள்ள மதங்கள் இம்மூன்றுமே யென்பது பிரத்தியட்சம். ஆயினும் அச்சமயங்களின் சமயவாதிகள் தங்கள் சமயாநுஷ்டானத்தினால் முன்னேற்றமடைந்தனரென்பதற்கு தக்க சான்று சரித்திர வாயிலாய்க் காட்ட வியலாதென்பதே எமது துணிபு. இதற்குமாறாய் மக்கள் அகில உலக முழுவதும் அந்தகாரவிருளில் ஆழ்ந்து நாஸ்திகம், மதமின்மை, அராஜரீகம், மதுவருந்தல், களவு, சூது, வியபிசாரம், கொலை, கொள்ளை, சிசுஹத்தி முதலிய அனாச்சார துர்க்கிரிகைகளில் யீடுற்று காட்டுமிராண்டியர்களாகவே வசித்து வந்துள்ளாரென்பதாக உலக சரித்திரங்களில் காணக் கிடக்கிறது. நாகரீக வளர்ச்சி, சீர்திருத்தத் துறைகளில் மக்களை நடாத்திக் காட்டுவதில் மேற்கூறிய மதங்களில் ஏதேனுமொன்று மற்றொன்றைவிட உயர்ந்த அந்தஸ்து வாய்ந்துளதாகவும் தென்படவில்லை.

சன்மார்க்க சீலரீர்! 13 நூற்றாண்டிற்குமுன் தென்மேற் காசியாவின் கண் (அரேபியாவில்) ஒரு ஞானிபானு அவதரித்து, தனது ஒளியை அரேபியா மட்டுமின்றி சர்வ பூவிற்கும் பரத்தினது. அவ்வொளியை பயன்படுத்தியவர்கள் பயன்படுத்திக் கொண்டனர்; க்ஷீணித்திருந்தவர்கள் உயர்நிலை உடையரராயினர். அநாகரீகர், நாகரீகராயினர்; அஞ்ஞானிகள் மெய்ஞ்ஞான ஜோதியடைந்தனர். தெய்வ மின்னதெனத் தெரியாத அவிசுவாசமுள்ளவர் விசுவாசிகளாயினர்.

விக்ரஹாராதனையை வேரோடுப் பிடுங்கி சத்தியக் கடவுளின் பக்கம் தஞ்சம் புகுந்தனர்.



சமத்துவம், சகோதரத்துவமில்லாது கோரத் தொழில் புரிந்த மக்கள் ஈகை பரோபகாரம், எல்லோரும் ஒன்றென அபேத கொள்கையிலீடுபட்ட மக்களாயினர். பஞ்சமா பாதகத் தொழில்களைக் களைந்தனர். ஆன்ம ஞானோபதேசங்களை விழைந்தனர். என்னே! எம்பெருமகராம் ஞான சூரியோதயத்தின் மகிமை! எம் மதங்களும், எத்தலைவர்களும், எச் சீர்திருத்த வாதிகளும் தொன்றுதொட்டு ஆற்றி வாராததென்ன? கனவிலும் நினையாத அருஞ் சேவைகளைத் தமது வாழ்க்கையின் மூன்றிலொரு பாக (இருபத்தி மூன்று ஆண்டில்) வயதில் ஆற்றி சேவைகளை சாதித்த இறுதித் தூதர் அவரே.

சோதரீர்! மதாராய்ச்சியின் கருத்து நம் கருத்திலில்லாததால் நந் தலையங்கத்தை நோக்குவோம். முன்னேற்றமென்பதைத் தத்தமக்கு வேண்டிய சொந்த முன்னேற்றம். தன் சமூக முன்னேற்றம். நம் தேச முன்னேற்றம் எனப் பலவகையாய்ப் பிரிக்கலாம். முன்னேற்ற வாதியெனப்படுவோன் இவைகளில் ஒன்றை விட்டுவிடும் பக்ஷத்தில் முன்னேற்ற வாதியெனச் சாற்றுவது பொருந்தாதென்றே யான் கூற முன் வருகிறேன்.

கல்வி, கைத்தொழில், அரசியல் ஞானம், தெய்வ வழிபாடு, ஆத்மீகம், ஐஸ்வரியம் வர்த்தகம் இவைகள் போன்றவை ஒவ்வொரு மக்கட்கும் இன்றியமையாத முன்னேற்ற வழியாகும். இவைகளில் ஒரு நூறு மக்களையெண்ணி எடுத்தால் 100-க்கு ஐந்து பேர் கலை, நாகரீகம் போன்ற துறைகளில் முன்னேறிய பேர் வழி நம்மிலில்லையென்பது தெற்றென விளங்கும். தொழிலில்லாது கைக்கட்டிக்கொண்டிருக்கவும், யாசித்துக் காலங் கடத்தவும், மடங்கள் சத்திரங்கள் இவைகளில் கஞ்சா, குடி, சூது போன்ற துர்க்கிரிகைகளில் வீணே பொழுது போக்கும் சோம்பேறிகள் அரைபாகமிருக்கலாமென யூகிக்கலாம். இவ்வித நிலையில் அன்னியாதிக்கம் அகலவேண்டும்; சுயேச்சை நாட்டவேண்டும்; தேசம் முன்னேற வேண்டுமெனக் கருதல் சேற்றிற் குளித்தற்கொப்பாகும். விவேகம் வெற்றியுறுமா? அல்லது அவிவேகம் வெற்றியுறுமா? முயற்சிப் பயனளிக்குமா? இன்றேல் சோம்பல் சுகந்தருமா?

“முயற்சி திருவினையாக்கும் முற்றின்மை
இன்மையாக்கும்”

என்ற திருக்குறளுடையார் பாவை சிந்தித்துப் பார்க்கும்படி வேண்டுகின்றனம்.

அன்பர்காள்! மேனாட்டு சோதரர்களையோ, வேறு நம் மிந்திய மக்களாகிய இதர சமூகத்தினரையோ சீர்தூக்கிப் பாருங்கள். மேனாட்டினர்களின் சரித்திரங்களைப் பார்க்கப் புகின் அருந்த ஆகாரமற்று, கட்ட ஆடையற்று ஒரு காலத்திலிருந்திருக்கின்றனர். இன்று நாம் கட்டிக்கொள்ளும் உயர்ந்த ஆடைகள் அவர்களை எதிர்பார்த்து வாங்கி கட்டவேண்டியிருக்கிறது. நம் தேசத்தினரிடம் அடைக்கலம் புகுந்து வர்த்தகஞ் செய்ய நம் நாடு வந்தனர். இஞ்ஞான்று வர்த்தகம் தொழில் ஆட்சி இவைகளெல்லாவற்றிலும் உயர்தர யோசனை, அந்தஸ்து, அடக்கியாளும் தன்மை பெற்றிருக்கின்றனர். 19, 20-ம் நூற்றாண்டு காலச் சக்கரத்தில் இவ்வித சுழலுக்குள் சுற்றி வந்திருக்கின்றனர்.

இவர்களை தற்கால மக்கள் பயந்தடங்கி வாழ வேண்டியதாயிற்று. இந்த அந்தஸ்துக்கு கொணர்ந்தவை அவர்கள்பால் மிழிர்ந்து கிடக்கும் ஒற்றுமை, கைத்தொழிலபிவிருத்தி, அரசியல் ஞானம், சமூகாபிவிருத்தி போன்றவைகளேயாகும். இனி முன்னேற்றத்திற்குரிய சாதனங்களாகிய அங்கங்களைப்பற்றி எம்பெருமான் (முஹம்மது ஸல்.) அவர்களின் பேருரையை நோக்குங்கள்:—உயர்ந்தவர்கள் நற்குணமுள்ளவரேயாவர். தெய்வ பயமுள்ளவர்களே மக்களில் சாலச்சிறந்தோராவர். ஆண்டவன்மீது விசுவாசமுள்ளவர்கள் பொய்யுரைக்க மாட்டார்கள். மேற்படி விசுவாசிகள் பிறரை வசைமொழி செப்பவோ, கடவுளின் சாபம் கூறவோமாட்டார்கள். இகவுலகில் மக்கட்குக் கருணை காட்டுங்கள்; பரமனின் கடாக்ஷமடைவீர்கள். கலை கற்றல் ஆண், பெண் இருவர்பாலும் கட்டாயம் கடமையாகும். தொழில் செய்பவனே ஆண்டவனின் தோழனாவான். நீதிவழுவாது தொழிலீட்டுங்கள். பிறரிடம் யாசித்தல் இழிவாகும். உங்கள் பந்துக்களை, அண்டைவீட்டினரை அணைத்துக்காப்பாற்றுங்கள். மரம் மக்கட்குப் பயனளிக்குமாறு நீங்களும் மரமா (பேருபகாரியா) யிருங்கள். இவ்வரிய போதனைகளை எவ்வித அமுத வாக்கியங்களென நீங்களே யுணர்ந்து பாருங்கள். மேற்கூறிய போதனைகளைத் தனித்தனியே ஈங்கெடுத்தாராய்வோம். வருதிர், விழுமின்.

## கலை

குஞ்சியழகுங் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்சளழகும் அழகல்ல—நெஞ்சத்து
நல்லம் யாமென்னும் நடுவுநிலைமையால்
கல்வியழகே யழகு. (நாலடியார்)

கலை கற்பதே தத்தம் முன்னேற்றத்திற்கின்றியமையாதது என, உணர்ந்து ஒவ்வொரு சமூகமும், அரசாங்கங்களும் கலாஞானம் வளர்தற்காக வேண்டி தக்க பிரயத்தனங்களும், நிதிகளும் சேர்த்து தங்கள் தங்கள் சமூக முன்னேற்றத்திற்கு பாடுபட்டு வருமிற்றை நாளில், நம்மில் புத்துணர்ச்சி யெழாது தூங்கிக்கொண்டிருத்தல் நம் சமூக துரதிர்ஷ்டமேயாகும். ஆரம்பக்கல்வியோ வெகு குறைவாக இருக்கிறது. உயர்தரக் கல்வியோவெனில் சொல்லத்தரமன்று. கலாவல்லுனர்களை வசைமொழி கூறுதற்கு நம்மில் பலருளர். இதுவே நம்முன்னேற்றமென்றால் நாம் அடைவது ஜெயமா? இன்றேல் அபஜெயமா? நீங்களே யூகியுங்கள். தேசிய ஞானம், அரசியல் ஞானம், மதானுஷ்ட ஞானம், ஆன்மஞானம் என்பனபோன்ற ஞானங்கள் நம்மில் எந்நிலை அடைந்துள்ளன என்று சிந்தித்துப்பார்த்தால் ஒருவித ஞானமுமே நம்மிலில்லையெனக் கூறுவதல்லாமல் வேறில்லை. இலௌகீக முன்னேற்றத்திற்கு தேசியம், அரசியல் ஞானமின்றியமையாததாகும். மதாஞானம், ஆன்ம ஞானம் வைதீகத்திற்கு உயிர்நாடியாயிருக்கிறது. இப்படி ஒருவித ஞானமுமில்லாதிருந்தால் வைதீகமோ இலௌகீகமோ இரண்டுமில்லையென்பது நன்கு புலனாகும். இருவிதக்கலைகளுமில்லாதவன் மானுஷீகத்தன்மையுள்ளவனா? அல்லது அமானுஷீகமுள்ள மிருகமா? உணருங்கள்.

### எனது அபிப்பிராயமும் வேண்டுகோளும்.

ஆருயிர் அறிஞர்காள்!

எம்பெருமகர், உலக மத போதகர் (முஹம்மது ஸல்.) அவர்கள் யாரிடத்திலும் கலாஞானம் கற்றவர்களாக இல்லாதிருந்தார்களெனினும், அன்னார் அறிவொளியைப்பற்றி ஈங்கு ஓர்வேம். அவர்கள் ஆசிரியரிடம் ஸ்கூலிலோ காலேஜிலோ சென்று கலை பயிலவில்லை. அவ்விதக் காலத்தில் எம்பெருமகர் கொண்டுள்ள ஆசிரியர்கள், "மண், விண், கதிர், மதி, சமுத்திரம், ஜீவன், தாவரம், தாது" போன்றவைகளேயாகும். இஃதல்லாது கடவுளின் தூதர் (ஜிப்ரீல்) அநேக அறிவுகளை அவ்வக்காலத்திற்கேற்றவாறு நம்பெருமகருக்கு புகட்டி வந்துளார். இயற்கையறிவு, தத்துவஞானம், பூகோளம், வான சாஸ்திரம், விஞ்ஞானம் போன்ற எல்லா அறிவுகளும் அவர்களில் மிளிர்ந்து கிடந்தன. இற்றைநாள் விஞ்ஞானிகள் ஆராய்ந்து கூறும் விஞ்ஞானம்யாவும் 13-வது நூற்றாண்டிற்கு முன்னமேயே கூறிவிட்டார்களென்றால் அவர்கள் அறிவின் மாண்புதானென்னே!

நம் கல்லூரிகள், கருங்கல், சுண்ணாம்பு, சிமிட்டி போன்றவைகளால் கட்டப்பட்டகோட்டைகளாக விருக்கின்றன. பெருமானவர்களின் கல்லூரிகளோவெனில், தேவாலயம், ஒவ்வொரு இல்லம், வீதி, ரோடு, திண்ணை, மலை, காடு போன்ற சாதாரண இடங்களாகவே யிருந்தன. பணச்செலவு பண்ணிப் படிக்கக் கஷ்டப்படும் மக்கள் படிப்பதற்கு நங்கால ஸ்கூல்களோ, காலேஜ்களோ, பெருமான் நபி (ஸல்.) அவர்கள் காலத்திய கலாசாலைகளைப்போல் பயன்தருமா? அறியுங்கள். உத்தம நபி (ஸல்.) அவர்கள் காலத்தில் ஒவ்வொருவர்களும் சிஷ்யர்களாகவும் ஆசிரியர்களாகவுமிருந்தனர். இங்ஙனமிருந்தால் கல்வி அபரிமிதமாய் வளர்ந்தோங்குமா? அல்லது குறைந்துகொண்டே போகுமா? அவர்கள் காலத்தினர் முற்போக்கடைந்தவரா? நாம் முன்னேறுவமா?

பெருந்தகையாளர்காள்!

நம் சமூக முன்னேற்றத்திற்கென ஆரம்ப பாடசாலைகள் மிக மிகக் குறைவாயிருக்கிறது. சகண்ட்ரி பாடசாலை, ஹைஸ்கூல், காலேஜ், யூனிவர்ஸிடி போன்ற உயர்தர கலாஸ்தாபனங்கள் நம் மாகாணத்தில் காண்பதரிதா யிருக்கிறது. ஒரு ஜில்லாவிற்கேனும் ஒரு முஸ்லிம் ஹைஸ்கூல் இருக்கிறதாவெனப் பார்க்கப் புகின் அதுவும் குறைவே. இப்படியிருந்தால் முன்னேறுவதெப்படி? நாம் வாசிக்கும் பாடசாலைகளில் இஸ்லாமிய கலை, நாகரீகம், இஸ்லாமிய சரித்திரங்கள், உத்தமசீலர் (நபி, ஸல்.) அவர்களின் வாழ்க்கைச் சரிதைபோன்ற கிரந்தங்களை கற்று கொடுப்பதுமில்லை, கற்றுகொள்வதுமில்லை. அரசாங்கத்தினர் ஆதரவளித்திருந்தாலும் அதை விரும்பி முயற்சிசெய்யாது விட்டுவிடுகின்றோம். நஞ்சிறார்கள் இதரசமூகத்தினரின் பழக்கவழக்கம் கலாஞானமிவைகளில் ஈடுபட்டு சத்தியமதமே யின்னதெனத் தெரியாது நாஸ்திக வாதம் பேச வாரம்பிக்கின்றனர். இவ்விதக் குறையை முன்னேற்றத் தடையென்று சொல்லாமலிருக்க முடியவில்லை யென்பதை குறிப்பிடுகின்றேன்.



பொதுநிதிகள் திரட்டியும், அரசாங்கத்தினர் சகாய உதவியினாலும் ஒவ்வொரு நாடு நகரென்ன? குக்கிராமங்களிலும் எலிமெண்டரி பாடசாலைகளையும் வேறு உயர்தர பாடசாலைகளையும் ஏற்படுத்தியும் நவீனமுறையில் சிறார் முன்னேறுந் தோரணையில் கலைபயிற்றுவித்து மதம், ஆசாரம், உயர்குணம், இஸ்லாமிய மதக்கோட்பாடு, இஸ்லாமிய சரித்திர வரலாறு போன்ற கலைகளையும் அப்பாடசாலைகளில் அங்கீகாரஞ்செய்து நம் சமூக முன்னேற்றத்திற்கு பாடுபட வேண்டுமென்பதே யான் வேண்டிய வேண்டுகோளும் அபிப்பிராயமுமாகும்.

## தொழில்

இப்பிரபஞ்ச வாழ்க்கையில் நம்மவர் ஆற்றிவருஞ் சேவைகளில் தொழிலுமொன்றாகுமென்பது ஒவ்வொருவருக்கும் இயற்கையறிவாகும்.

கலாபிவிருத்திபோன்றே தொழிலாபிவிருத்தியில் ஒவ்வொரு சமூகமும் அல்லும்பகலும் ஓயாது அரும்பாடுபட்டு வருகின்றன. வர்த்தகம், மில், கைத்தொழில், விவசாயம், கப்பல் தொழில், ரயில்வே, மருந்துச்சாலைத் தொழில், ஆயுதச்சாலைத்தொழில்போன்ற சர்வ தொழிலிலும் மேனாட்டினர் முன்னேறி வருவதனாலேயே சர்வசுதந்திரம்பூண்ட ஜெயசீலர்களாய்த் திகழ்கின்றனர். இதைக் கண்ணுற்ற நம்மிந்திய மக்களிலும் ஏனையோர் தக்கதோர் முறை தொழிலுணர்ச்சி பூண்டவர்களாய் சர்வதுறைகளிலும் முன்னேறிச் செல்கின்றனர். இவ்விதச் சகோதரர்களைப் பார்த்தேனும் புத்துணர்ச்சிகொள்ளுவீர்களாக. இவ்வித குறைவிற்கு நம் சத்திய போதகர் நபி (ஸல்.) அவர்களின் ஜீவியசரிதை, உத்தம சிஷ்யர்கள் (ஸஹாபாக்கள் றலி) அவர்களின் வாழ்க்கைச் சரிதைகளையும் பெருமானின் சட்டதிட்டப் பிரமாணங்களையும் நம் சமூகம் கல்லாமலும் கற்றாலும் ஒழுகி வாராததுமே முதற்காரணமென ஈண்டும் குறிப்பிடுகிறேன். பெருமகர் (நபிகள் ஸல்.) அவர்களை முன்மாதிரியாய் கொண்ட காரணத்திலேயே அவர்களின் நண்பர்கள் கலை, இஸ்லாமிய நாகரீகம், தொழில் வர்த்தகம்போன்ற சர்வதுறைகளிலும் முன்னேறினர். அவர்கள் எழுமையாயிருந்தனர். ஜனக்கணிதத்தில் மிகவும் குறைவாகவிருந்தனர், ஏழைகளாகவும், வறிஞர்களாகவு மிருந்துவரும் இப்பெரியார் (ஸஹாபாக்)களை, அவர்களின் விரோதிகள் (குப்பார்கள்) "நம்மிடம் அவர் (ஸஹாபாக்)கள் எதிர்ப்பது மட்கலம், கல்லிடம் போராடுவதற் கொப்பாகு"மென்று ஏளனஞ்செய்து வந்தனர். காலஞ் செல்லச் செல்ல அவ்விரோதிகள் அன்னவர்கள்பால் சரண்புகுந்தனர். இதுவென்ன? ஸிரியா, பாலஸ்தீன், இராக், ஈரான், எமன், நஜத் போன்ற நாடுகள் யாவும் அப்பெரியார்களின் ஆதிக்கத்தின் கீழ் வந்துவிட்டன. இவ்வித அபரிமிதமான வெற்றிகளுக்குக் காரணம் அவர்களிடமுள்ள ஆயுதபலமும் ஆள்பலமுமா? அல்லது நபிகள் கோமான் (ஸல்.) அவர்களின் போதனைகளைச் சிரமேற்கொண்டு வழுவாது நடந்துவந்த கிரியாம்சையின் பிரதிப் பிரயோஜனமா? நீங்களே அறியுங்கள்!

அப்பெரியார்கள் (ஸஹாபாக்கள்) எவ்வித முன்னேற்றத் துறைகளிலு மீடுபடாது வெறுமனே கைகட்டிக்கொண்டு இருந்திருப்பின் 1300 வருஷத்தியச் சரிதைகளில் போற்றப்பட்டு சரித்திரங்களுக்காக அருகதையாவார்களா? அப்பெரியார்களை நாம் மட்டுமென்ன? நாகரீகம், சீர்திருத்த வாதிகளெனப்படும் மேனாட்டினரும் போற்றிப் புகழ்வதுடனில்லாது நாகரீகம், கல்வி, தொழில், விஞ்ஞானம், தேசியம், அரசியல் ஐக்கியம்போன்ற சகல துறைகளிலும் தங்களுக்கு மட்டில்லாது சர்வ உலகத்தினருக்கும் வழிகாட்டும் சத்தியபோதகர்களென அந்நாகரீகவாதிகளே கூறிவருகின்றனர். ஆகவே, இனியேனும் முற்போக்குக்குரிய வழிகளைக் கைபிடிப்பீர்களென நம்புகிறேன். நமதுநபிகள் பெருமான் (ஸல்) அவர்களின் அரும்போதனைகளில் சிலவற்றை ஈண்டுமாராய்வோம். பிறரிடம் யாசித்துண்ணாமல் தன் குடும்பத்தைப் பரிபாலிப்பான் வேண்டியும், தன் அண்டை வீட்டுமக்களைக்கவனித்து காப்பாற்றும் பொருட்டும் பொருளீட்டுபவன் பூரணமதிக்கொத்த அழகிய முகத்தோடு தன் ஆண்டவனை மறுவுலகில் பேட்டிக்காண்பான். (நபிநாயக வாக்கியம்). பிறரை மோசஞ் செய்யாத உண்மை வர்த்தகன், உண்மையான மெய்யடியார்களோடும், ஆண்டவன் வழியில் உயிரை அற்பஞ் செய்த உயிர்தியாகி (ஷஹீத்)களோடும் மறுஉலகில் எழுப்பப்படுவான் (நபிநாயகவாக்கியம்).

பொருளையே சப்பாதித்துக்கொண்டிருக்கும் ஒருவனைப்பார்த்து ஸஹாபாக்கள்யாவரும் இம்

மனிதர் தனது முயற்சிகளை ஆண்டவன் வழியிற் செலவழித்தால் நல்ல ஜெயசீலராகலாம் எனக்கூறிக்கொண்டிருந்தனர். அதைக்கேட்ட ரஸூல் (ஸல்) அவர்கள் "நீங்கள் என்ன கூறுகிறீர்கள்? ஒரு மனிதர் தன் மாதா, பிதா, மனைவி மக்களை காப்பாற்றும் பொருட்டுச் சம்பாதிப்பினும் ஆண்டவனுக்குச் செய்ய வேண்டிய தவங்களில் அவன் முயற்சி எண்ணப்படு" மென தன் சிஷ்யர் (ரலி) அவர்களுக்கு மறுமொழி கூறினர்கள்.

பொருளீட்டலில்லாது கைகட்டிக்கொண்டு பிறரிடம் யாசித்து சாப்பிடும் தவமூர்த்தியைப் பார்க்கினும் பொருளீட்டும் சாமர்த்தியனும் பிறருக்கு உபகாரியுமான மனத்தினரே சிரேஷ்டர்களாவர். (நாயக வாக்கியம்)

சிந்தனையாளீர்! செப்புதலெளிது; செய்தலரிது என்பது யாவரும் கூறிவருங் கூற்றேயாகும். ஆகையால் நாம் நம் நடைமுறையில் காட்ட வேண்டியது அத்தியாவசியமாகும். நம்மிஸ்லாமிய மதபோதனைகளை நழுவவிடுவதே நம்க்ஷீணதிசைக்குரியகாரண மென்பது சொல்லாமலே தெரியவரும். இதோடு நில்லாது ஐக்கியம், சமத்துவம், தவம், முயற்சி போன்ற முன்னேற்றங்களை ஈண்டும் ஆராயப்புகுவோம். இன்ஷா அல்லாஹ்.

(தொடரும்)

---

## ஹஜ்ரத் உமர் (ரலி) அவர்களின் ஜீவகாருண்யம்.

(தென்காசி. மீ. இ. மு. அபுல்ஹஸன் ஷாதலிவரைவது.)

முற்கால மன்னர்கள் தம்நாட்டின் நிலைமையைத்தாமே நேரில் தெரிந்து கொள்ளும் பொருட்டு இராக்காலங்களில் மாறு வேஷத்துடன் வெளிக்கிளம்பி, நாடெங்கும் சுற்றிவருவது வழக்கம். எந்தக்குடும்பம் கஷ்டப்பட்டாலும் அவர்களுக்குத்தக்க உதவி செய்வதை அவர்கள் தங்கள் கடமையாகக் கொண்டிருந்தார்கள்.

உதாரணமாக, நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்குப்பின் இரண்டாவது கலீபாவாக (அரசராக) இருந்த ஹஜ்ரத் உமர் (ரலி) அவர்களும் 'ஸைத்,' என்ற ஒரு இஸ்லாமிய பக்தரும் ஓர் இரவு மதீனாநகருக்கருகிலுள்ள "ஜூம்ரயேவாக்" என்ற இடத்தருகிற்சென்று கொண்டிருக்கையில் ஒரு குடிசையில் சிறிய வெளிச்சம் தென்பட்டது. அது "யாதாயிருக்கலாம், பார்த்துவருவோம்" என்று பேசிக்கொண்டே இருவரும் அக்குடிசைக்குச் சென்றனர்.

அது ஒரு மிகவும் ஏழையின் குடிசை. அதில் ஒரு மாதும் பல குழந்தைகளும் பிழைப்புக்கு வழியின்றி அன்ன ஆகார மின்றி குற்றுயிராயிருந்தார்கள். அங்குள்ள குழந்தைகள் பசியால் துடிக்கின்றன. இன்னும் சில தினங்களில் உயிர்துறந்துவிடும் போலிருக்கின்றன. ஒரு மூலையில், ஒரு அடுப்பு எரிந்து கொண்டிருக்கிறது. அதன்மேல் ஒரு பாத்திரத்தில் நிரம்ப ஜலம் கொதிக்கிறது.

அங்கிருந்த மாதைப்பார்த்து ஹஜ்ரத் அவர்கள், "ஏன் இக் குழந்தைகள் அழுகின்றன? அப்பாத்திரத்தில் எதற்காக ஜலம்வைத்துக் காய்ச்சப்படுகிறது?" என்று கேட்டார்கள். அதற்கு அந்த ஸ்திரீ "எங்களுக்கு அன்ன ஆகாரம் கிடையாது. நானும் இக்குழந்தைகளும் பசிப்பிணியால் வாடுகின்றோம். எங்களுக்கு உதவி செய்பவர் இவ்வுலகில் யாருமே கிடையாது. இக்குழந்தைகளின் கவனத்தை வேறுவழியில் திருப்ப இந்த ஜலத்தைக் கொதிக்கவைத்துக் கொண்டிருக்கிறேன்" எனக்கூறினள்.

நள்ளிரவு! எங்கும் ஒரே இருள் சூழ்ந்திருந்தது. மதீனா நகருக்கும் அக்குடிசை இருக்குமிடத்துக்குமோ, வெகுதூரம். ஒழுங்கான பாதைகிடையாது. குடிசையில் கண்டதுக்க சம்பவம் ஹஜ்ரத் அவர்களின் இதயத்தைப் பிளந்தது.

ஹஜ்ரத் அவர்கள் தங்கள் சகாவுடன் மதீனா நகரின் பைத்துல்மால் (பொது நிதி) அறைக்கு விரைந்து சென்று, அங்குள்ள யாவருக்கும், தெரியாமல், மாவு மூட்டைகளிருக்குமிடம் சென்றார்கள். ஒரு பெரிய மூட்டையை 'ஸைத்' அவர்களுக்குக்காட்டி அதைத்தன் முதுகின்மீது ஏற்றிவைக்கும்படி செய்தனர். 'ஸைத்' அம்மூட்டையைத் தான் சுமப்பதாக எவ்வளவோ கூறியும் அரசர் கேட்கவில்லை. என்னே மன்னவரின் கருணை!

முள்ளும் கல்லும் நிறைந்த பாதையை, சுமையுடன் இருட்டில் கடந்து குடிசையில் நுழைந்தனர் இருவரும். உடனே, வேந்தர் சிரம பரிகாரம் செய்து கொள்வதற்குப் பதிலாகத் தான் அடுப்படியிற் சென்று ரொட்டியை சுட ஆரம்பித்தார். அச்சமயம் அடுப்பும் அணைந்துவிட மறுபடி அரசர் அடுப்பு ஊதவும் நேரிட்டது! கண்களிலோ, நீர் பெறுகுகின்றது. தாடிவழியாக புகைகிளம்புகிறது. ஆயினும் மன்னவரின் மனவுறுதி வேறு விதமாயிருந்தது! முடிவில், பெரிதும் சிரமத்துடன் ரொட்டி சுட்டு முடித்தனர். 'ஸைத்' தடுத்துச்சொல்ல இயலாதவராகி விட்டார். குடிசையிலுள்ளவர்களோ, உபகாரம் செய்பவரை வரவேற்று வாழ்த்துகிறார்கள். அவர்கள் இத்துணைக் கஷ்டம் எடுத்துக்கொள்ளும் அப் பரோபகார புருஷரை இன்னா ரென்று அறிந்து கொள்ளவில்லை போலும்!

இக்குழந்தைகள் வயிறார ஆகாரம் தின்று புதிதாக வந்த இருவருடனும் கூடிக்குலாவின. அம்மாதும், பெரியாரை வாழ்த்தினள். ஹஜ்ரத் அவர்களும் விடை பெற்றுக்கொண்டு பொழுது புலருமுன் மதீனாநகர் திரும்பினர்.

முஸ்லிம்காள்!

ஜீவகாருண்யம், கருணை என்றால் இவ்வாறல்லவோ இருக்க வேண்டும். பெருமைக்காகச் செய்யும் தருமம் தருமமல்ல. உபகாரம், உண்மையில் வேண்டிய இடத்தில் செய்யவேண்டும். ஏழைமக்களை உங்கள் சகோதரர்களாகப்பாவியுங்கள். ஹஜ்ரத்உமர் (ரலி) அவர்கள் அனுஷ்டித்துக்காட்டிய வழியைப் பின்பற்றுங்கள். அவர்கள் பெரிய மன்னராகவிருந்தும் அவர்கள் செய்த தொழிலை நன்கு கவனியுங்கள். இறைவன் நம்மவர்கட்கு உத்தம பக்தர்களைப்பின்பற்றியொழுக நல்லருள் பாலிப்பாஞகை. ஆமீன் வஸ்ஸலாம்.

---



## காதியானி மிர்ஜாவின் வழிகெட்ட கொள்கையைப்பற்றிய விளக்கம்

(மௌலானா மஹ்மூதுல் ஹஸன்சாகிப்)

இவ்வியாசகர்த்தா தம்முடைய இக்கட்டுரையில் மிர்ஜாகுலாம் அஹ்மது ஆரம்பத்தில் நபிகள் நாயகம் (ஸல்.) அவர்கள் உலகத்தாருக்குக் கருணையாக இருந்தார்கள் என்பதையும், இறுதி நபி யென்பதையும் ஒப்புக்கொண்டிருந்ததுடன், நபிகள் நாயகம் (ஸல்.) அவர்களுக்குப் பின்னர் எவ்விதமான நபி தோன்றுவதாக நம்பினாலும் அந்த நம்பிக்கை மதப்புரட்டும் மதத்தைவிட்டு விலகுவதுமாகிய கொள்கையாகும் என்று நம்பினார் என்பதையும் பின்னர் அவர் தம்முடைய இக்கொள்கையை மாற்றிக்கொண்டு தன்னை நபியென்று தாவாச் செய்த விபரத்தையும் விளக்கியிருக்கிறார். இவ்விதழில் முதன் முற்பகுதி பிரசுரிக்கப்படுகிறது. (ப-ர்.)

சுத்த சத்திய இஸ்லாம் மதத்திற்கு அநேகம் ஆபத்துகள் வந்தன. ஆயினும், அவைகள் சத்தியத்திற்கு முன் நிற்க முடியவில்லை. மேலும், ஷைத்தானிய கூட்டம் பிரவாகம் போன்ற சக்தியுடன் இஸ்லாத்தை எதிர்த்தும் அக்கூட்டம் இனி என்றென்றுமே தலையெடுக்கா வண்ணம் அடிபட் டொழிந்தது. கணக்கில்லாததும் வரையறையில்லாததுமான இந்த ஆபத்துகளில் பொய்யர்களாலும், தஜ்ஜால்களாலும் உண்டான ஆபத்துகள் தான் மிகவும் தீங்கிழைப்பனவாக இருந்தன. இந்த ஜனங்கள் பற்பல தோரணையிலும் ரூபத்திலும் தங்களது கொள்கைகளைப் பிரசாரம் செய்தனர். சிலர் ஏழைகளையும் அனாதைகளையும் ஆதரிப்பதாகக் கூறிக்கொண்டு பிரசாரத்தி லிறங்ினர்.

சிலர் சீர்திருத்தம் என்ற பெயரைக் கூறிக் கொண்டு வந்தனர். தங்களது மன அவாவுக்கு அடிமைப்பட்டவர்களும், இப்லீசின் சந்ததியினருமான இவர்கள் பல முறைகளால் அறிவிலா மாக்களிடம் தங்களது வழிகேடான கொள்கையைப் பிரசாரம் செய்தனர். மேலும், இந்த மதங்களெல்லா வற்றையும் வயிறு வளர்த்தல், கௌரவ வேட்கை, பேராசை ஆகியவைகளைப் பூர்த்தி செய்வதற்கான கருவிகளாக ஏற்படுத்தி இருந்ததால் இவைகள் நீண்டகாலம் நிலைநிற்கவில்லை. நமது நபிகள் நாயகம் (ஸல்.) அவர்களது ஜீவிய காலத்தில் சுயநலமும் பேராசையும் கொண்ட 'முஸைலமத்துல் கத்தாப்' என்பவன் முஸ்லிம்கள் பெருகி, முன்னேறி வருவதைப் பார்த்து அவனுக்கு நாவில் ஜலம் ஊறிற்று. சாமான்ய ஜனங்களது ஜோபியை யடிப்பதற்கும், அவர்களது பொருள்களைக் கொள்ளை கொள்வதற்கும் ஏற்ற மார்க்கம் நபியாகுவதுதான் என்று அவன் கருதி தனக்கு நபிப் பதவி கிடைத்திருப்பதாகப் பொய் தாவாச் செய்ததுடன் இதனைப்பற்றி நபிகள் நாயகம் (ஸல்.) அவர்களுக்கு ஒரு கடிதமும் எழுதினான். அக்கடிதம் வருமாறு:—

அல்லாஹ்வின் ருஸூல் முஸைலமா அல்லாஹ்வின் ருஸூல் முஹம்மது (ஸல்) அவர்களுக்கு எழுதிய கடிதம். அஸ்ஸலாமு அலைக்கும் வறஹ்மத்துல்லாஹி. நான் நபிப்பதவியிலும் றஸூலாக இருப்பதிலும் தங்களுக்குப் பங்காளியாக இருக்கிறேன். தங்களது குறைஷிக் குலத்தாரின் போக்கு மிகவும் கவலையளிக்கக்கூடியதாக இருக்கிறது. அவர்கள் அறப்தேசம் முழுவதையும் கவர்ந்து கொள்பவர்களாகஇருப்பதுடன் அதன்எல்லையையும்கடந்து விடுகிறார்கள். ஆகவே நான் நபிப்பதவியில் தங்களுக்குப்பங்காளியாக்கப்பட்டிருப்பதால் பாதி ராஜ்யத்தை எனக்குக் கொடுத்து விடவேண்டும்".

இந்தக் கடிதத்திற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பின்வருமாறு மறுமொழி கொடுத்தார்கள்:—

"அல்லாஹ்வின் றஸூல் முஹம்மது (ஸல்) அவர்கள்), பொய்யன் முஸைலமாவுக்கு அனுப்பிய கடிதம். நேர் வழியைப் பின் பற்றுகிறவர்களுக்கு ஸலாம் உண்டாவதாக. ராஜ்யம் அல்லாஹு தஆலாவுக்குச் சொந்தமானதாக விருப்பதால் அவன் இஷ்டப்பட்டவருக்கு அதனை கொடுக்கிறான் என்பதையும், கடைசி முடிவு பயபக்தியுள்ளவர்களுக்கு நன்மையாக இருக்கும் என்பதையும் உணர்ந்து கொள்".

இந்தப் பொய்யன் தனது எண்ணங்களையும் அபிப்பிராயங்களையும் பிரசாரம் செய்து ஆயிரக்கணக்கான ஜனங்களைத் தனது ஷைத்தானிய வட்டத்தினுள் சேர்த்துக் கொண்டான். கடைசியாக ஸித்தீக் அக்பர் (றலி) அவர்கள் கலீபாவாக இருந்த காலத்தில் இஸ்லாமிய சைனியங்களை எதிர்த்து யுத்தமும் செய்தான். அவனது சைனியங்களிலுள்ள போர் வீரர்கள் எண்ணிக்கையில் முஸ்லிம் முஜாஹிதுகளைப் பார்க்கினும் அதிகமாக இருந்தனர். ஹஜ்றத் வஹ்ஷீ (றலி) அவர்களது அம்புக்குக் குரியாகி நரகத்தை யடைந்தான். ஹஜ்றத் வஹ்ஷீ (றலி) அவர்கள் இஸ்லாம் மதத்தைத் தழுவுவதற்கு முன்னர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களது சிறிய தந்தையான ஹஜ்ரத் ஹம்ஜா (றலி) அவர்களை உஹதுச்சண்டையின் போழ்து ஷஹீதாக்கினார். ஆகவே, பொய்யன் முஸைலமாவை எதிர்க்க முஸ்லிம்கள் கிளம்பியபோது முற்கூறப்பட்ட ஹஜ்றத் வஹ்ஷி (றலி) அவர்களும் கூடச்சென்று ஹஜ்றத் ஹம்ஜா (றலி) அவர்களைத் தாக்கிய அதே ஆயுதத்தால் பொய்யன் முஸைலமாவையும் சமயம் பார்த்துத் தாக்கினார். அதற்குப் பிறகு வேறொரு அன்ஸாரியும் பொய்யன் முஸைலமாவை வாளாயுதத்தால் தாக்கினார்.

இவ்விஷயத்தைக் குறித்து ஹஜ்றத் வஹ்ஷி (றலி) அவர்கள் "நான் இஸ்லாத்தைத் தழுவியபின்...............அதே ஆயுதத்தைக் கொண்டு பொய்யன் முஸைலமாவை வேலை தீர்த்தேன்? என்றுகூறி இருக்கிறார். ஹஜ்றத் ஹம்ஜா (றலி) அவர்களை ஷஹீதாக்கிய குற்றம் தன்னிலிருந்து நிகழ்ந்ததற்காக ஹஜ்றத் வஹ்ஷீ (றலி) அவர்களது இருதயத்தில் துக்கமும் வருத்தமும் இருந்து கொண்டிருந்தது. ஆனால், பொய்யன் முஸைலமாவை மரணத்தின் பாதாளத்தில் இரக்கியபோது "இந்தப் பொய்யனை நான் கொன்ற இச்செய்கையை இறைவன் என்னுடைய அந்தபாவத்திற்குப் பரிகாரமாக ஆக்குவானாக" என்று கூறினார்.

"ஹஜ்ரத் அபுல்பஷர் ஆதம் (அலை) அவர்கள் முதல் ஹஜ்றத் ஈஸா (அலை) அவர்கள் வரை அநேகம் நபிமார்களும் றஸூல்மார்களும் அனுப்பப்பட்டனர். அந்த நபிமார்களெல்லோரும் ஒரே ஒரு செங்கல் மாத்திரம் வைக்கப்படாமல் பூர்த்தியாகி இருக்கி ஒரு மாளிகையைப் போலிருக்கிறார்கள். நானும் வந்தேன்; அந்தச் செங்கல்லும் வைக்கப்பட்டு விட்டது; அந்த மாளிகையின் கட்டிடமும் பூர்த்தியாகி விட்டது." என்று நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் என்பதாக ஸஹீஹான ஹதீதில் வந்திருக்கிறது. "இன்றையதினம் உங்களுக்கு உங்களது மார்க்கத்தைப் பூர்த்தி செய்தேன்; இன்னும் எனது அருட்கொடையை நான் நிறப்பமாக்கினேன்; உங்களுக்கு இஸ்லாமை சன்மார்க்கமாகப் பொருத்திக் கொண்டேன்" என்பதாக பரிசுத்த இறைவனும் திருகுர்ஆனில் கூறியுள்ளான். மார்க்கம் பூர்த்தியாகி அருட்கொடையும் நிறப்பமாகி விட்ட பின்னர் புதியமதத்திற்கும் புதிய நபிக்கும் அவசியம் எங்கே இருக்கிறது? குர் ஆன்ஷரீபிலுள்ள சில ஆயத்துகள் வேறு சில ஆயத்துகளுக்கு வியாக்யானமாக இருக்கின்றன. அவைகளில் சிலவற்றை நான் ஈண்டு எடுத்தெழுதுகிறேன். அவைகளிலிருந்து நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் நபிமார்களில் கடைசியானவராக இருக்கிறார்கள் என்பது வெளியாகும். எல்லா உலகங்களையும் பரிபாலிப்பவனான அல்லாஹ்வுக்கே எல்லாப்புகழும் தகும்.

எல்லா உலகங்களையும் பரிபாலிப்பவன் இருக்கும்போது நமக்கு எந்த மரமோ, கல்லோ, தெய்வமாகுவதற்குத் தேவையில்லை.

மக்காமு அல்லமாவைக்குறித்து இறைவன் "உலகத்தாருக்கு நேர் வழி காட்டி" என்பதாகக்கூறி இருக்கிறான். இந்தச்சிறப்பான தலைநகரிருக்கும்போது நமக்கு வேறு தலை நகரிருக்க வேண்டிய தேவையில்லை.

"இது உலகத்தாரனைவருக்கும் உபதேசமாக இருக்கிறது." என்று திரு குர் ஆனைப் பற்றிக்கூறப்பட்டிருக்கிறது. இந்தப்பரிபூரணமான வேதம் இருக்கும்போது வேறு வேதம் இருக்க வேண்டிய அவசியமில்லை.

### நபித்துவம் முடிவடைந்து விட்டதாக மிர்ஸா குலாம் கூறியிருப்பது.

"எனக்குப் பின்னர் எத்தகைய நபியும் வரமாட்டார்" என்பதாக நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பன்முறை கூறியிருக்கிறார்கள். "எனக்குப்பின் எத்தகைய நபியுமில்லை" என்ற ஹதீது நிஜமானது என்ற விஷயத்தில் எவரும் ஆக்ஷேபனை செய்ய முடியாதபடி அவ்வளவு பிரபல்யமாக இருக்கிறது. ஒவ்வொரு பதமும் "கதஇ" யாக (உறுதியானதாக - நிஜமானதாக - சந்தேகத்திற்கு இடமில்லாததாக) இருக்கிற திருகுர் ஆனானது "எனினும், அவர் அல்லாஹ்வின் தூதராகவும், நபிமார்களில் கடைசியானவராகவும் இருக்கிறார்" என்ற ஆயத்தின் மூலமாக இவ்விஷயத்தை ஊர்ஜிதம் செய்திருக்கிறது. ஆகவே, நமது நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைக் கொண்டு நபித்துவம் முற்றுப்பெற்று விட்டது என்பதே சத்தியமாகும். இஸ்லாமிய கொள்கையில் சம்மந்தப்பட்டுள்ள எல்லா விஷயங்களையும், நான் ஒப்புக்கொள்கிறேன்; சுன்னத்துவ ஜமா அத்துக்காரர்களின் கொள்கையை அங்கீகரிக்கிறேன்; குர் ஆன் ஹதீது ஆகியவைகளின்படி ருஜூவாகி இருக்கிற இதர எல்லாவிஷயங்களையும் அங்கீகரிக்கிறேன்; ஸெய்யிதுனா வமௌலானா முஹம்மதுர் றஸூலுல்லாஹி (ஸல்) அவர்களுக்குப் பிறகு நபித்துவத்தை அல்லது ரிஸாலத்தை தாவாச் செய்கிற எவரையும் நான் பொய்யர் என்பதாகவும் காபிர் என்பதாகவும் கருதுகிறேன்; வஹியும் ரிஸாலத்தும் ஹஜ்றத் ஆதம் ஸபியுல்லா அவர்களிலிருந்து ஆரம்பமாகி ஹஜ்றத் முஹம்மது முஸ்தபா (ஸல்) அவர்களிடம் முற்றுப் பெற்று விட்டது, என்பது எனது உறுதியான நம்பிக்கை; இதர சுன்னத்து வஜமா அத்துக்காரர்களுக்கு இவ்விஷயங்களில் இருக்கிற அபிப்பிராயமே எனக்கும் இருந்து வருகிறது; இப்பொழுது நான் அடியிற்கண்ட விஷயங்களை முஸ்லிம்களுக்கு முன்னிலையில் அல்லாஹ்வின் வீட்டில் (டில்லி ஜாமிஉ மஸ்ஜிதில்) பகிரங்கமாகக்கூறுகிறேன்; ஜனாப் காத்தமுல் அன்பியா (ஸல்) அவர்களது நபித்துவத்தை நான் ஒப்புக்கொள்கிறேன்; "கத்தமுன்னுபுவ்வத்"தை ஒப்புக்கொள்ளாதவர் மார்க்கமற்றவர் என்றும், இஸ்லாத்தின் வட்டத்திற்குப் புறம்பானவர் என்றும் நான் கருதுகிறேன்.

1891-ம் வருஷம் அக்டோபர்மீ 21 தேதி டில்லி ஜாமிஆ மஸ்ஜிதில் நடைபெற்ற கூட்டத்தில் மிர்ஜாகுலாம் அஹ்மது காதியானி சமர்ப்பித்த எழுத்து மூலமான ஸ்டேட்மெண்ட் "தப்லிகேரிஸாலத்" என்னும் புத்தகத்தின் 2-வது வால்யூம் 44-ம் பக்கத்தில் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. அது வருமாறு: குர்ஆன் ஹதீதுக்கு மாறாக இருக்கிற சகலமும் பொய்யென்பதாகவும், இஸ்லாத்திற்குப் புறம்பானதாகவும் நான் உணர்கின்றேன். அப்படியிருக்க நான் முஸ்லிம்களில் ஒருவனாக இருந்து கொண்

டிருக்கும்போது நான் எவ்விதம் நபித்துவத்தை தாவாச் செய்ய முடியும். என்று கூறியிருக்கிறார்.

நேயர்காள் !

மிர்ஜாயிகள் குலாம் அஹ்மது காதியானியின் புத்தகங்களை குர்ஆன் ஹதீது ஆகியவைப்பார்க்கினும் அதிகமாகக் கௌரவிக்கின்றனர். குலாம் அஹ்மதுவின் நூல்களிலிருந்து நாம் மேலே எடுத்தெழுதியிருப்பவைகளை அவர்கள் படித்துப் பார்த்து மிர்ஜாசாகிப் காபிராக இருந்தாரா அல்லது முஸ்லிமாக இருந்தாரா என்ற விஷயத்தைத் தாங்களாகவே முடிவு செய்து கொள்வார்களாக. மிர்ஜாயிகளே ! தக்வாவின் வழியைக் கடைப் பிடியுங்கள். இல்லையேல் கியாமத்து நாளில் நீங்கள் கைசேதமடைவீர்கள்.

(தொடரும்)

---

# பாலஸ்தீனத்தில் அடக்கு முறை

**பா**லஸ்தீனில் ஸர் ஆர்தர் வாச்சூபின் நிர்வாகத் திறமையின்மையால் இந்தியாவிலுள்ள விவேகிகளுக்கு துக்கம் கோபம் ஆகிய உணர்ச்சிகளுண்டாகி இருக்கின்றன. பாலஸ்தீனில் ஏற்பட்டுள்ள நிலைமையானது பிரிட்டிஷ் மந்திரிச் சபை மிகவும் சீக்கிரமாக ஏதேனும் ஒரு நடவடிக்கையை எடுத்துக் கொள்ளவேண்டிய அவசியத்தையும், நிராயுத பாணிகளான நகர வாசிகளுக்கு விரோதமாக நேர்மையற்ற முறையில் பலத்தை உபயோகிப்பதானது இஸ்லாமிய உலகில் பரபரப்பையும் உண்டாக்கி வைத்திருக்கிறது.

பாலஸ்தீனி லேற்பட்டுள்ள உள்நாட்டுக் கலகத்தின் குற்றம் ஸர். ஆர்தர் வாச்சூபின் நிர்வாகத்தின் பேரிலேயே இருக்கிற தென்பது நமது அபிப்பிராயம். ஸர் ஆர்தர் வாச்சூபின் நிர்வாகமானது இஸ்லாமிய உலகில் கிரேட் பிரிட்டனுக்கு விரோதமான உணர்ச்சியை உண்டாக்கி இருக்கிறது. மேற்பார்வை அதிகாரத்தை அநியாயமான தோரணையில் ஸர் ஆர்தர் உபயோகித் திருப்பதற்கு சார்பு நாடுகளிலும்கூட உதாரணம் கிடைக்க மாட்டாது. பிரிட்டிஷ் மந்திரிகள் தனிப்பட்ட முறையிலும், பிரிட்டிஷ் மந்திரிச் சபை கூட்டு முறையிலும் அளித்துள்ள எல்லா வாக்குறுதிகளையும் அவர் அஞ்சாமல் மீறிவிட்டார்.

பாலஸ்தீன் பிரசினையைப்பற்றி மிக விரிவாக ஆராயவேண்டும் என்று நினைக்கிறோம். இப்படி ஆராய்வதற்கு இஸ்லாமிய உணர்ச்சி மாத்திரம் காரணமில்லை. பலவந்தமாக ஆட்சி புரிவதை நமது எல்லைக்குள் நாம் வரவிடுவதா அல்லது வெளியிலிருக்கும்போதே அதனை எதிர்பதா என்பதுதான் நம்முன்னிருக்கும் பிரசினை. பலவந்தமாக ஆட்சிபுரியும் தன்மையானது மற்றொரு ஆசிய நாட்டைத் தனக்கு வேட்டைப் பிரயாணியாக்கிக் கொள்ள இந்தியா அனுமதித்துக் கொண்டிருக்க வேண்டியது அவசியமா ? சென்ற 1920 ம் வருஷத்தில் விரும்பத் தகாத அரசியல் திட்டத்தை எதிர்த்து இந்தியா போராடியதுபோல் மற்றொரு முறை நடத்த வேண்டுமென்று நாம் விரும்புகிறோம்.

## எதேச்சாதிகாரம்

அந்நிய அரசாங்கம் தனக்குக் கீழுள்ள பிரஜைகளின்மீது பலத்தையும் நிர்ப்பந்தத்தையும் பிரயோகிப்பதற்கு எதேச்சாதிகாரம் என்று பெயர். அதில் கபடச் செய்கைகளுக்கும், நேர்மையின்மைக்கும் எவ்வித வரையறை கிடையாது. சக்தியையும் பலத்தையும் நம்பி உண்டாகின்ற இந்த எதேச்சாதிகாரத்தை நாம் எதிர்க்கவேண்டும். இந்த அடக்குமுறை இதரர்கள் உயிர் வாழ்தல், சுதந்திரம் ஆகியவைகளைக் கொள்ளை யிடும்படியான எதேச்சாதிகாரம் உலக சமாதானத்திற்கு ஆபத்தானதாக இருக்கின்றன. ஆதலின், நாம் அதனை வெறுக்கும் விஷயத்தில் நியாயக்கக்ஷியிலேயே இருக்கிறோம்.

பாலஸ்தீன் பிரசினையானது நம்மைப்பாதிக்காது என்றும், இது இஸ்லாமிய உலகத்தை அல்லது முஸ்லிம்களை மாத்திரம் பொறுத்த



பிரசினை என்ற முறையில் இதனை நினைக்க வேண்டாம்என்றும் நாம் இந்தியத்தலைவர்களைக் கேட்டுக்கொள்கிறோம். கிலாபத் இயக்க காலத்தில் தலைவர்கள் இந்தியா முழுவதையும் இதில் பங்கெடுத்துக்கொள்ளும்படிச் செய்த அழைப்பின் உணர்ச்சியை நாம் மறுபடியும் உயிர்ப்பிக்க விரும்புகிறோம். இந்தியாவின் கிளர்ச்சியும் அனுதாபமும் இந்தியாவையும், இதர ஆசியா நாட்டையும் அழிவிலிருந்து காப்பாற்ற முடியும். இந்தியாவானது பலஹீனமாகவுள்ள ஆசியா நாடுகள் விஷயத்தில் தனக்குள்ள நல்லெண்ணத்தை எப்பொழுதும் காண்பித்துக் கொண்டேவந்திருக்கிறது. இவ்விஷயத்தில் எப்பொழுதும் தவறியதே இல்லை. இந்தியாவில் வசித்துக்கொண்டிருக்கும் லக்ஷக்கணக்கான ஆசியா ஜனங்கள் இப்பொழுதும் இந்தியாவை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். நாம் இந்த முக்கியமான சந்தர்ப்பத்தில் அவர்களைக்கைவிட்டு நம்பிக்கை யிழக்கும்படிச் செய்யலாலாது.

இனி, நமது நிலைமையைக் தெளிவுபடுத்துகிறோம். இப்பொழுதிருக்கும் நிலைமை எவ்வளவு அபாயகரமான தென்பதைப்பற்றி நாம் உணரவே இல்லை. பிரிட்டனுடையவும் யூதர்களுடையவும் முயற்சிகள் சமூகம், மதம் என்ற தோரணையில் உண்டுபண்ணியது அந்த பழைய வேற்றுமையேயாகும் என்பது முன்னிருக்கிறது. பாலஸ்தீனத்தை உள்நாட்டுச்சண்டை என்ற நரகத்தில் இது கொண்டுபோய்த்தள்ளிவிடும். ஆனால், பாலஸ்தீனம், ஷாம், எகிப்து ஆகியவைகள் சுயேச்சையாக இருப்பது இந்தியாவின் சுயேச்சையுடன் இணைக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, இந்த ஒரு நோக்கத்தை நம் முன் வைத்துக்கொண்டு நாம் சமீப கீழ்தேசங்களில் வாழும் ஜனங்களுடன் கூட்டுத்திட்டம் ஒன்றை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும் என்று இந்தியத்தலைவர்களை நாம் கேட்டுக் கொள்கிறோம்.

நாம், ஸர் ஆர்தருடைய நிர்வாக முறை குற்றமானது என்பதாகக் கூறி இருக்கிறோம். ஆதலின், இப்பொழுது நாம் இக்குற்றத்தை ருஜுப்படுத்துவதற்காக ஜனத்தொகை விகிதாசாரத்தைச்சமர்ப்பிக்கின்றோம்.

## பால் போர் அறிக்கை.

சென்ற 1917-ம் வருஷத்தில் பால்போர்பிரபு அடியிற்கண்ட அறிக்கையைப் படித்தார் :—

"பாலஸ்தீனத்தில் யூதர்களின் தாபகமேற்படுத்துவதை அரசர் பெருமானின் அரசாங்கம் ஆதரிக்கும் தோரணையில் பார்க்கிறது. இந்நோக்கம் நிறைவேறுவதற்கான வசதிகளையுண்டாக்குவதில் தனது சிறந்த முயற்சிகளையெல்லாம் அமலில் கொண்டு வரும். ஆனால், இவ்விதம் செய்வதால் பாலஸ்தீனிலுள்ள யூதர்களல்லாத சமூகத்தினரின் சிவில் உரிமைகளிலும், மத உரிமைகளிலும் எவ்விதத்திலும் தலையிடக் கூடியதும், இதர தேசங்களில் யூதர்களுக்குக் கிடைத்துள்ள பாத்தியதைகளும், அந்தஸ்துக்களும் இவர்களைப் பாதிக்கும்படியானது மான எந்தக் காரியத்தையும் அமலில் கொண்டுவரப் படமாட்டாது என்பதைத் தெளிவாக அவர்கள் (யூதரல்லாதார்) உணர்ந்துக் கொள்ள வேண்டும்".

பாலஸ்தீனில் வாழும் அறபியரின் சிவில் உரிமைகளிலும் மத உரிமைகளிலும் தலையிடப்படமாட்டாது என்பதை கிரேட் பிரிட்டன் இவ்வறிக்கையில் தெளிவாக உறுதி மொழி கூறி இருக்கிறது. யூதர்கள் பாலஸ்தீனில் குடியேறுவதற்கு அனுமதி கொடுக்கப் படும் என்பது மட்டிலும்தான் இந்த அறிக்கையால் விளங்குகிறது. பாலஸ்தீனத்தை யூதர் நாடாக ஆக்குவது இந்த அறிக்கையின் கருத்து என்பதாகப் பொருள் கொள்ள முடியாது.

இனி சர்வ தேச சங்கம் மேல்பார்வை அரசாங்கங்களுக்கு அளித்துள்ள அதிகாரங்களைப் பற்றிக் கவனிப்போம். மேற்பார்வை அரசாங்கங்களை மூவகை அந்தஸ்துள்ள அரசாங்கமாக பிரிக்கப்பட்டிருக்கிறது. இதில் நாம் விவாதிப்பது முதலாவது அந்தஸ்திலுள்ள அரசாங்கத்தைப்பற்றியதே யாகும்.

## பிரசிடெண்ட் வில்ஸனின் 14 நிபந்தனைகள்.

சென்ற 1918ஆம் ஜனவரிமீ 8-தேதி பிரசிடென்ட் வில்ஸன் தன்னுடைய 14 நிபந்தனைகளை அறிக்கை செய்தார். இவைகளின் 5-வது நிபந்தனை வருமாறு :—

" அரசாங்க தாவாவுடன் உரிமை கிடைக்க வேண்டியவர்களுக்கு சம்மந்தப்பட்ட ஜனங்களின் நன்மை அவசியமான முறையில் சமமாகக்கவனிக்கப்படும்."

அதிலுள்ள 12-வது நிபந்தனை வருமாறு:—

"பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கீழில் ஜனங்களின் சுயேச்சையான முன்னேற்றத்திற்கு

உறுதியானதும் தெளிவானதுமான சந்தர்ப்பம் அளிக்கப்படும்''.

இஃதிவ்வாறிருக்க, சரித்திர சம்மந்தமான சிலருஜூக்களைச் சமர்ப்பிக்கின்றேன். சர்வதேச சங்கத்தின் 22-வது பிரிவில் "அந்த தேசங்களின் சுபிக்ஷத்தாலும் முன்னேற்றத்தாலும் நாகரீகத்திற்கு பரிசுத்தமான ஒரு நம்பிக்கை உண்டாகின்றது. இந்த நம்பிக்கையை அமல் நடத்துவதற்குரிய ஜாமின் இந்த கவினன்டில் (மேல்பார்வையில்) சேர்த்து விடப்படும்''. என்று கூறப்பட்டிருக்கிறது. எனவே, சரித்திரப்பூர்வமான இம் மேற்கோள்களிலிருந்து சமீப கீழ்தேசங்களின் சுயேச்சை உறுதியாக —தெளிவாக ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கிறது என்பது வெளிப்படை. இன்னும், அங்குள்ள மேற்பார்வை யரசாங்கங்கள் நிர்வாகிகள் என்ற முறையில் குறிப்பிட்ட ஒரு காலம்வரை காரியத்தைச் செய்து கொண்டிருக்கவேண்டும். ஸர் ஆர்தர் வாச்சூபுக்கு இவ்வுண்மைகள் நன்கு தெரியும் என்பது நமதபிப்பிராயம். நம்முடைய இவ்வபிப்பிராயம் சரியாக இருக்குமாயின், அவர் தமது அதிகார எல்லையை விட்டுக்கொடுக்காமலிருக்கவேண்டியது அவருடைய கடமையாகும். அவர் இவ்வதிகார எல்லையை விட்டுக் கடந்திருப்பாராயின் கிரேட் பிரிட்டனின் நற்கீர்த்திக்கு கறையுண்டாகுவதற்குப் பூரணமான பொறுப்பு அவர்மீதில் மட்டிலுமே ஏற்படுகிறது.

### வேறு சில ஆதாரங்கள்

இந்த இடத்தில் நாம் சரித்திரப் பூர்வமான திட்டத்தைச் சமர்ப்பிக்கின்றோம். இத்திட்டத்தின் மூலமாகத்தான் கிரேட் பிரிட்டனுக்கு பாலஸ்தீனத்தின்மீது மேற்பார்வை அதிகாரம் கிடைத்தது. 1920-ம் வருஷத்தில் துருக்கி அரசாங்கத்திற் குட்பட்ட நாடுகள் கிரேட் பிரிட்டனுக்கும் பிரான்சுக்கு மிடையில் ஸான் ரிமோ என்ற இடத்தில் பங்கு போட்டுக் கொள்ளப்பட்டன. இப்படி பங்கு போட்டுக் கொண்டது இரகசிய சம்பாஷணையின் மூலம் நிகழ்ந்தது. பிரசிடென்ட் வில்ஸன் சமீப கீழ் தேசங்களுக்கு கிங்கிரைன் கமிஷனை அனுப்பினர். சுயேச்சையுள்ள ஷாம் பாலஸ்தீன் ஐக்கிய அரசாங்கம் ஏற்படுவதற்குச்சாதகமாக அறபியர்களது அபிப்பிராயமிருந்தது என்பது இக்கமிஷனின் ரிப்போட்டிலிருந்து தெரியவருகிறது. இன்னும், பலஸ்தீனத்தை யூதர்களது நாடாக ஆக்கவேண்டும் என பிரிட்டன் கையாண்டுவரும் யூதமனப்பான்மையை அறபியர்கள் பலமாக எதிர்க்கிறார்கள் என்பதும் அதிலிருந்து தெரியவருகிறது. சுயேச்சை கிடைக்கவில்லையாயின் ஐக்கிய அரசியலமைப்பை ஆதரிப்பதாகவும் அறபியர்கள் கூறி இருந்தனர்.'' இந்த ரிப்போர்ட்டை அவர்கள் முதுகுப்புறம்பே போட்டு விட்டார்கள். ஒரு இரகசிய உடன் படிக்கையின் மூலம் பிரிட்டனும் பிரான்சும் சமீப கீழ்ப்பிரதேசங்களைத் தங்களுக்குள் பங்கு போட்டுக்கொண்டன. அங்குள்ள ஜனங்களின் விருப்பங்கள் அடியுடன் புறக்கணிக்கப்பட்டன. அறபியர்களது சுயேச்சை இயக்கம் அக்கிரமமாக நசுக்கப்பட்டது.

### லாசேன் மகாநாடு

1923-ல் லாசேன் மகாநாடு நடைபெற்றபோது ஐரோப்பிய அரசாங்கங்கள் பலஸ்தீன், ஷாம், எகிப்து, சூடான், ஸைப்பிரஸ், இராக் ஆகியவைகளிலுள்ள துருக்கியின் உரிமைகளைப்பலவந்தமாக அடக்கி விட்டன. பலஸ்தீனத்தில் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் வழியில் இடையூறாக இருந்த கடைசிமுள்ளையும் அகற்றி விட்டு பிரிட்டிஷ் ஹைகமிஷனர் யூதப்பணத்தின் உதவியால் பலஸ்தீனத்தில் யூத அரசாங்கம் ஏற்படுத்துவதற்கான அஸ்திவாரக்கல்லை நாட்ட முன்வந்தார். அறபியரின் நிலங்களைக் கிரயத்திற்கு வாங்கியதானது தேசத்தில் வேலையில்லாத் திண்டாட்டத்தை யுண்டாக்கி விட்டது. யூதர்கள் பெருவாரியாகக்குடியேறியதால் யூதஜனத்தொகை அபாயகரமான முறையில் பெருகிற்று. 1926-ம் வருஷத்திலிருந்த ஜனத்தொகையையும் 1931-லிருந்த ஜனத்தொகையையும் கீழே குறிப்பிடுகிறோம்.

| | 1926 | 1931 |
|---|---|---|
| முஸ்லிம்கள் | 6050000 | 6769000 |
| யூதர்கள் | 40000 | 175000 |

அறபியருக்குப் பன்முறை உறுதி மொழி கூறியுங்கூட பால்போர் அறிக்கையானது பலஸ்தீனத்தை யூத நாடாக ஆக்குவதற்கு முகமூடிபோன்ற முறையாக இருந்ததென்பது வெளிப்படை.

### வெள்ளைக் கடுதாசி

யூத ஏஜன்ஸிக்கும் பிரிட்டிஷ் ஹை கமிஷனருக்கு மிடையில் நடைபெற்ற இரகசிய உடன்படிக்கையை ஆதரிக்கும் சக்தியானது 1929-ல் அறபியர்களுக்கு பதில் சொல்லிற்று. பொருளாதார முறையில் இரு சக்திகளையும் (யூதர் அறபியர்) நாசம் செய்துகொண்டிருந்தது. நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டிருந்த அமைதியின்மையை ஹைகமிஷனரால் போக்க முடியாமல், அறபியர்களின் கலகத்தை ஆயுதந் தாங்கிய சக்தியால் அடக்கினர். பிறகு, 1930-ல் சர்வதேச சங்கம் வற்புறுத்திய தன் பேரில் வெள்ளைக் கடுதாசி என்ற முறையில் பிரிட்டிஷ் அரசாங்கம் அறிக்கையைப் பிரசுரித்து அதில் தனது கொள்கையை வெளியிட்டது.

"யூதர்கள் குடியேறுவதானது அறபியர்களது வேலையில்லாத் திண்டாட்டத்திற்குக் காரணமாக எச்சமயத்தில் அமைந்தாலும், யூதர்களது வேலையில்லாத் திண்டாட்டம் அறபியருக்குக் கிடைக்கும் கூலியைப் பாதித்தாலும் யூதர்களைக் குடியேற்றுவது நிறுத்தப் பட்டுவிடும். கூடிய சீக்கிரத்தில் பலஸ்தீனத்தில் ஜனப் பிரதிகளுக்குக் கட்டுப்பட்ட அரசாங்கம் ஏற்படுத்தப்படும்'' என்று வாக்குறுதியளிக்கப்பட்டது.

மேலே நாம் சமர்ப்பித்துள்ள ஆதாரங்கள், ஹைகமிஷனரின்மீது நாம் சுமத்தியுள்ள குற்றம் நியாயமானதுதான் என்பதை ருஜூப்பிக்கப்போது மானவை என்று நினைக்கிறோம். இங்கிலாந்தின் ஜீவியம் யூத உலகத்தின் பாலுள்ள அன்புடன் இணைக்கப்பட்டு, கிறிஸ்துவர்களுக்கு மாறு செய்வதை அவர்கள் (யூதர்கள்) உண்மையாகவே வெறுப்பவர்களாகி விட்டால் தங்களது அரசாங்கத்திற்குள் அவர்களுக்கு பிரிட்டிஷார் தாயகம் ஏற்படுத்தாமலிருப்பது ஏன்? என்று வினவுகின்றோம். யூதர்களது குடியேற்றத்தை நிறுத்தாவிடில் கிரேட் பிரிட்டன் தனது உத்தியோகஸ்தர்களது செய்கைகளுக்கு மிகவும் அதிகமான கிரயம் கொடுக்க வேண்டிய தேற்படும் என்பதையும், ஏதேச்சாதிகாரம் செலுத்துவதற்குரிய காலம் விரல் விட்டெண்ணக் கூடிய அளவிலேயே இருக்கிறது என்பதையும் அறிவித்துக் கொள்கிறோம். இங்கிலாந்து இக்காலத்திலுள்ள எல்லா அரசாங்கங்களிலும் அதிகவலிமை பொருந்தியது. அபிசினியாவிலுள்ள குற்றமற்ற நிராயுதபாணிகளான ஜனங்களின்மீது மனிதத்தன்மையற்ற முறையில் செய்யப்பட்ட தாக்கை அது ஆக்ஷேபித்திருக்கிறது. இப்பொழுது ஏதேச்சாதிகார முறையின் மரணம் ரத்தப்பழியுடன் முடியுமா அல்லது அமைதியாகவும் மௌனமாகவும் முடியுமா என்பது மட்டிலும் இப்பொழுது உலகுக்குப் பதில் சொல்லவேண்டியதாக இருக்கிறது. இதற்கு எதிர்காலம் பதில் சொல்லும்.

"நியூ ஆர்டர்"

---



## இஸ்லாமியப் பிரசாரம்.

இது போழ்து ஐரோப்பா, இந்தியா, ஆப்பிரிக்கா முதலியபலநாடுகளிலும் இஸ்லாம் மிகவிரைவாகப் பரவிக் கொண்டிருக்கிறது. முஸ்லிம் அல்லாத வர்க்கத்தாரில் ஒரு பெருங் கூட்டத்தினரோ அல்லது பிரபலஸ்தரோ இஸ்லாத்தைத் தழுவின செய்தி தினசரி பத்திரிகைகளில் பிரசுரமாகிக் கொண்டிருப்பது ஒன்றே இதற்குப்போதிய அத்தாட்சியாகும். இஸ்லாம் நாளுக்கு நாள் பெருகி வருவது சந்தோஷமளிப்பதாகவும் ஆச்சரிய மூட்டுவதாகவுமிருக்கிறது. முஸ்லிம் அல்லாதார் ஒருவர் இஸ்லாத்தைத் தழுவினதும் அவர் மறுவுலக முக்திக்கான மார்க்கத்தை அடைந்து விடுவதைக் கண்டு முஸ்லிம்கள் தங்களது உண்மையானதும் அந்தரங்க சுத்தியானதுமான அபிமான உணர்ச்சியால் சந்தோஷமடைகின்றனர். ஆதலின், தற்போதை இஸ்லாமிய அபிவிருத்தியானது முஸ்லிம்களுக்குச் சந்தோஷத்தையும் மகிழ்ச்சியையுமுண்டாக்குவதாக இருக்கிறது. இஸ்லாத்தினுடைய இவ்வெற்றியானது எவ்வித முயற்சியும், பிரசாரப் பிரயத்தனமுமின்றி ஏற்பட்டுக் கொண்டிருப்பதால் இது ஆச்சரியகரமாகவுமிருக்கிறது. இஸ்லாம் தனது வெற்றிக்காகப் பிரசாரகர்களின் முயற்சியின்பாலும், முஜாஜிது

களின் உழைப்பின் பாலும் அதிகம் தேவையுள்ளதாக இல்லை. அது தனக்குள்ளாகவே அனேகம் சத்தியங்களையும் உண்மைகளையும் வைத்துக்கொண்டிருக்கிறது. ஆதலின், அது தானாகவே பிறரை வசீகரித்துக் கொள்ளும். அதிலிருக்கும் பிரகாசத்தைக் காணும் எவரும் அதற்முன் தங்களது சிரசைத்தாழ்த்தாமலிருக்க முடியாது. ஆதலின், இப்பொழுது செய்ய வேண்டிய முக்கிய வேலை என்ன வென்றால், இஸ்லாத்தின் சத்திய வழியில் கிடக்கும் முட்களையும் கற்களையும் அகற்றி விட்டு அதற்குரிய வழியைச் சுத்தப் படுத்துவதேயாகும். அதாவது அதனுடைய சத்திய அழைப்பை ஜனங்களது செவிகளுக்கெட்டச் செய்வதேயாகும். பிறகு, இருதயங்களுக்குட் செல்லும் வேலையை அது தானாகவே கவனித்துக் கொள்ளும். இது போழ்து உலகம் முழுவதிலும் இஸ்லாத்தின்பால் ஒரு நல்ல உணர்ச்சி பரவி இருக்கிறது. தற்போதைய வாழ்க்கை முறையில் ஏற்பட்டுள்ள சிக்கல்கள் இவ்வுணர்ச்சியை உண்டாக்கி இருக்கின்றன வென்று தோன்றுகிறது. ஐரோப்பாவானது பிரகிருதி சம்மந்தமான தனது முன்னேற்றத்தில் விரைந்து சென்று கொண்டிருந்தாலும் அது ஆத்மார்த்த அல்லல்களிலும் மன வமைதியின்மையிலும் அதிகம் பீடிக்கப்பட்டுக் கொண்டே இருக்கிறது. ஆகவே, ஆத்மசாந்தியையும், இவ்வுலகத்தைய கஷ்ட நிவாரணத்தையும் அளிக்க வல்லமதம் இஸ்லாத்தைத்தவிர்த்து வேறொன்றிருப்பதாகக் கண்ணுக்குப் புலப்படவில்லை.

இந்தியாவிலும் சத்திய மதத்தைத் தேடுவதில் இரவும் பகலும் முயற்சி செய்து கொண்டிருக்கிற படித்த வர்க்கத்தாரில் ஒரு கூட்டத்தினரைத் தவிர்த்து, கோடிக்கணக்கான ஜனத்தொகையுள்ள தீண்டாதார்கள் ஹிந்து மதத்தில் தங்களுக்குள்ள நெருக்கடியைச் சகித்துக் கொள்ள முடியாமல் தங்களுக்கு மனித உரிமையையும் உண்மையான சமத்துவத்தையும் அளிக்கவல்ல மதத்தைத் தேடிக்கொண்டிருக்கிறார்கள். இன்று இவ்வுலகில் இஸ்லாத்தைத் தவிர்த்து வேறெந்த மதமும் அவர்களது தாக விடாயைத்தணித்து, அவர்களது கோரிக்கைகளைப்பூர்த்தி செய்வதாக இல்லை. ஆதலின், முஸ்லிம்கள் இச்சந்தர்ப்பத்தைத்தவற விடாமல், உலகிலுள்ள ஒவ்வொரு மூலையிலும் இஸ்லாத்திய சத்திய அழைப்பைஜனங்கள் உணர்ந்து கொள்ளும்படிச் செய்வது அவசியமாகும்.

இஸ்லாம் மதச்சட்டப்படி ஒவ்வொரு முஸ்லிமும் இஸ்லாமியப் பிரசாரம் செய்யக்கடமைப் பட்டிருக்கின்றனர். திரு குர் ஆனிலும் ஹதீது ஷரீபிலும் இக்கடமையைப்பற்றிய கட்டளைகள் பலவிருக்கின்றன. இஸ்லாம் மதம் ஒன்றில்தான் அதனுடைய புதல்வர்கள் பிரசாரம் செய்ய வேண்டுமென்ற கட்டளை கண்டிப்பாக விதிக்கப்பட்டிருக்கிறது. உலகத்திலுள்ள இதர மதங்கள் குறிப்பட்ட ஒரு தேசத்தினருக்கோ, நாட்டினருக்கோ, வகுப்பாருக்கோ, ஜாதியினருக்கோ மட்டிலும் சொந்தமாக இருப்பதால் அவைகளில் இதுபோன்ற கட்டளை எதுவுமில்லை என்பது உண்மையேயாகும். இதனால்தான் இஸ்லாம், தேசம், ஜாதி, வகுப்பு என்ற அபிமானத்தின் தழைகளை விட்டு அகன்று மனிதாபிமானம், உலகாபிமானம் என்ற உணர்ச்சியின் துவஜத்தைத் தாங்கி நின்று கொண்டிருக்கிறது. உலகம் முழுவதும் சகோதர உணர்ச்சியினுள் வந்து விடுவதற்காகவும், ஒரு பெருங் குடும்பத்தைப் போல் அமைதி சமாதானம் ஆகியவைகளுடன் கூடிய சிறந்த வாழ்க்கை முறையை நடத்துவதற்காகவும் உலகத்திலுள்ள ஒவ்வொரு சமூகத்தாரிடமும் இதன் அழைப்பை அறிவித்து விட வேண்டுமென்று தனது பக்தர்களுக்கு இஸ்லாம் கட்டளையிட்டுள்ளது.

“நல்ல காரியத்தை ஏவித் தீய காரியத்தை விலக்கிக்கொண்டிக்கும்படியான ஒரு கூட்டம் உங்களில் இருந்து கொண்டிருக்க வேண்டும்”.

“தங்களுடைய ஜனங்களுக்கு எச்சரிக்கை செய்வதற்காகவும் மார்க்கத்தில் அறிவைத் தேடிக் கொள்வதற்காகவும் அவர்களில் ஒரு கூட்டம் இருக்க வேண்டாமா?”.

என்று திருகுர் ஆன் பல கட்டளைகளை நமக்கு விதித்திருப்பதுடன் நில்லாது “நன்மையை ஏவித் தீயதை விலக்குவதற்காகவே நீங்கள் சிறந்த உம்மத்துகளாக அனுப்பப்பட்டிருக்கிறீர்கள்” என்று கூறி இருக்கிறது.

திருகுர் ஆன், ஹதீது ஷரீபு ஆகியவைகளில் இவ்விதமான கட்டளைகளிலிருந்து கொண்டிருக்கும் போது முஸ்லிம்கள் இக்கடமையை உண்மையாகவே உணரவேண்டிய அளவிற்கு உணராமல் இருந்து விட்டது மிகவும் ஆச்சரியமேயாகும். ‘குலபாயே ராஷிதீன்’கள் கலீபாவாக இருந்த காலத்தில் அவர்களும் ஏனைய முஸ்லிம்களும் தப்லீகே இஸ்லாம் விஷயத்தில் எத்தனை உணர்ச்சி ததும்பியவர்களாகவும், உலகத்திலுள்ள ஒவ்வொரு மூலைகளிலும் இஸ்லாமிய அழைப்பை அறிவிப்பதற்கு எவ்வளவு தீவிரமாகவும் இருந்தார்கள் என்ற விஷயம் சரித்திரங்களிலிருந்து நமக்குத் தெரிய வருகிறது. ஆனால், இடைக் காலத்திலிருந்த முஸ்லிம் அரசர்களும் பொது ஜனங்களும் இப்புனித கடமையை நிறைவேற்றுவதில் அத்தனை கவனம் செலுத்த வில்லை; அடியுடன் இக்கடமையை மறந்து விட்டனர் என்று சொல்லுவது மிகையாகாது. இவர்கள் சகலதேசத்தினரிடமும் பிரசாரகர்களை அனுப்பி இஸ்லாத்தின் அழைப்பை முறைப்படி தெரிவித்துக் கொண்டிருந்தால் இன்றைய உலகத்தின் நிலைமையே வேறுவிதமாக இருக்கும் என்பதிற் சந்தேகமில்லை. இக்கடமையைச் செய்யத்தவறிய தோஷத்தின் பயனாகவே இன்றைக்கு முஸ்லிம் அல்லாதார் இஸ்லாத்தின் மீது பழிசுமத்தியும், இஸ்லாம் வாளாயுதத்தால் பரத்தப்பட்டதென்றும், கூறி இஸ்லாத்தின்பால் துவேஷமும் வெறுப்பும் கொண்டு, இடைகாலத்திலுள்ள முஸ்லிம் அரசர்களைத் திட்டியும் ஏசியும், மதத்துவேஷி என்று இழித்துக் கூறியும் வருகின்றனர்.

அக்காலத்தில் கட்டுப்பாடான இஸ்லாமியப் பிரசாரம் நடை பெறவில்லையானாலும் உண்மையும் தெய்வ பக்தியுமுள்ள உலமாக்களும், ஸூபிகளும் தனிப்பட்ட முறையிலும் சொந்த ஹோதாவிலும் தங்களாலியன்றவரை இக்கடமையைச் செய்து வந்ததற்கு இறைவனுக்கு நன்றி செலுத்தக் கடமைப் பட்டுள்ளோம். இவர்களது முயற்சியால் விளைந்த பயன் சுல்த்தான்கள் அரசர்கள் காலத்தில் நிகழ்ந்த பயன்களைப் பார்க்கினும் அதிகம் பிரயோஜனகரமாகவு மிருக்கிறது. இஸ்லாமியப் பிரசாரம் மிகவும் அவசியமாகவுள்ள இக்காலத்திலும் கூட முஸ்லிம் அரசர்கள் இவ்விஷயத்தை மறந்திருந்த போதிலும், முஸ்லிம் பொது ஜனங்கள் இதில் அசிரத்தை கொண்டிருந்த போதிலும் ஆங்காங்கு அத்தி பூத்தாற்போல் சிலசங்கங்கள் தோன்றி ஓரளவு கண்ணீர் துடைத்து கொண்டு தானிருக்கின்றன. ஆனால், இவைகளின் உண்மையான நோக்கங்களையும் விருப்பங்களையும் நாம் அலசிப் பார்ப்போமாயின் இவைகளில் சில கீர்த்திக்காகவும், பெயருக்காகவும், தலைமைப் பதவிக்காகவும் உழைத்து வருகின்றன என்ற உண்மை வெளிப் படுவதற்கு நாம் வருந்தாமலிருக்க முடிய வில்லை.



அந்தரங்க சுத்தியுடனும், அல்லாஹ்விற்காகவும், தனது கடமையை நிறைவேற்ற வேண்டுமென்ற உணர்ச்சியுடனும் இத்துறையில் ஈடுபட்டுள்ள சங்கங்களிலும் பெரும்பான்மையானவைகளின் முயற்சி திருவினையாகாமல் இருந்து வருகிறது. இவைகள் இத்துறையில் தோல்வியுற்றனவென்று கூறுவதும் கூட பொருத்தமேயாகும். இதற்குப் பலகாரணங்களிருக்கின்றன. அவைகளைப் பற்றி இங்கு விரிவாக விவாதிப்பதற்குப் பதிலாக இவைகள் வெற்றியுறுவதற்கான மார்க்கத்தைத் தேடுவதே உசிதமாகும். இவைகளை ஆங்காங்குள்ள தலைவர்களும் அறிஞர்களும் ஆராய்தல் அவசியமாகும். இந்த இடத்தில் இரண்டு விஷயங்களைப் பற்றி மட்டிலும் சுருக்கமாகக் கூறவிரும்புகிறோம். சிலசங்கங்களில், பிரசாரவேலை பார்த்துவருகிற ஊழியர்களிடம் உண்மையான பிரசார உணர்ச்சி இருக்கவேண்டிய அளவிற்கு இல்லை. அவர்களிற் சிலர் இஸ்லாத்தின் திருவுபதேசங்களை அறியாதவர்களாகவே இருக்கின்றனர். அறிவில்லாக்குறைவால் அவர்களது பிரசாரவேலை தப்லீகே இஸ்லாமுக்குப் புறம்பானதாகவே இருக்கிறது என்று சொல்லலாம். இவர்களது ஜீவியமும் வாழ்க்கை முறையும் இஸ்லாத்தின் போதனைகளுக்கு முன் மாதிரியாகவும், இஸ்லாத்தின் சிறந்த நல்லொழுக்கங்களைப் பின்பற்றுபவைகளாகவும் இருப்பின் இவர்களது நல்லொழுக்கம் முஸ்லிம் அல்லாதாரின் இருதயங்களில் வாளாயுதங்களாலும் பீரங்கிகளாலும் செய்ய முடியாத காரியங்களைச் செய்து விடும் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை.

மேலும், இச்சங்கங்களிற் பல தங்களது இப்பிரசாரத்தை விவாத முறையிலும் தர்க்கத்திலுமே செய்து வருகின்றன. தர்க்க வாதத்தின் மூலம் ஒரு காபிர் கூட இஸ்லாத்தைத் தழுவியதில்லை. தர்க்க வாதம் செய்வதானது சத்தியப் பிரசாரத்திற்கு உபயோகமற்ற ஆயுதமாக இருந்து வருகிறது. இதனால் ஜனங்களது இருதயத்தில் போட்டியுணர்ச்சியும் சத்தியந்தவறுகையுமே உண்டாகின்றது. திருகுர் ஆனில், பிரசாரம் செய்வதற்கான சகல முறைகளும் தெளிவாகக் கூறப்பட்டிருக்கின்றன. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் பிரசாரம் செய்த முன் மாதிரியும் நமக்கு இருந்து வருகிறது. இஸ்லாமியப் பிரசாரம்செய்வதற்கு எத்தகைய யுக்தியைப் பின்பற்றவேண்டும் என்பதை நபிகள் நாயகம் (ஸல்) அவர்களது ஜீவிய சரித்திரத்தில் சுலப

மாகத் தெரிந்து கொள்ளலாம். ஆகவே, இம் முக்கிய கடமையை நிறைவேற்ற விரும்பும் கனவான்கள் திருகுர் ஆன் ஹதீது ஆகியவைகளைத் தங்களுக்கு வழிகாட்டியாக அமைத்துக் கொண்டு, மேலே கூறப்பட்ட இரண்டு காரியங்களையும் கவனித்து இத்தொண்டையாற்றுவார்களாயின், இவர்களது முயற்சி திருவினையாகுமென்பதிற் சந்தேகமில்லை.

---

# கிணறு வெட்ட பூதம் வெளிப்பட்டது.

காந்திஜீயின் ஜேஷ்ட புதல்வர் மிஸ்டர் ஹீராலால் காந்தி, இஸ்லாம் மதத்தைத் தழுவியதுபற்றி சென்ற மாத இதழில் நாம் எழுதியுள்ளோம். இவர் இஸ்லாம் மதத்தைத் தழுவிய சம்பவத்திற்கு ஹிந்துக்களும் முஸ்லிம்களும் அதிக முக்கியாம்சத்தைக் கொடுத்துக்கொண்டிருக்கின்றனர். முஸ்லிம்கள் தங்களுக்கு மிகவும் பெரிய செல்வம் வந்ததுபோல் இவரது இஸ்லாம் மதப் பிரவேசத்தால் சந்தோஷமடைகின்றனர். ஹிந்துக்கள் இச்சம்பவத்தால் அதிக கோபமடைந்து அவரைக் கேவலப்படுத்தவும் தூஷிக்கவும்கூட முன்வந்து விட்டனர். இச்சமயம், சிற்சில விஷயங்களைக் கவனிக்குமிடத்து இஸ்லாத்தைத் தழுவுவதில் அதிக முக்கியாம்சமுள்ள செளமுஸ்லிம்கள் ஏராளமாக இருக்கின்றனர். இப்படிப் பெரிய பெரிய மனிதர்கள் ஏராளமாகத் தினசரி இஸ்லாத்தைத் தழுவியும் அதனைப் பார்த்து முஸ்லிம்கள் எவ்விதமான மகிழ்ச்சியும் கொள்வதில்லை. அப்படி இருந்தும் ஜனாப் அப்துல்லா காந்தி இஸ்லாத்தைத் தழுவியதற்கு மாத்திரம் ஹிந்துக்களும் முஸ்லிம்களும் இத்துணை முக்கியாம்சம் கொடுத்திருப்பதற்குக் காரணம் அவர் பிரபல ராஜிய தலைவர் ஒருவரின் புதல்வர் என்பதேயாகும். இஸ்லாத்தில் இயற்கையாகவே பல நன்மைகளிருக்கின்றனவாதலின், ஜனங்கள் அதன்மீது பிரேமைகொள்வது முற்றிலும் சரியேயாகும், இஸ்லாம் மதத்தில் மகத்துவமிருக்கிறதாதலின், ஜனங்கள் அதற்குமுன் பணிந்து சிரம் சாய்ப்பது இயற்கையேயாகும். ஆதலின், எவ்வளவு பெரிய மனிதர் இஸ்லாத்தைத் தழுவியபோதினும் அதற்காக நாம் விசேஷத்துவம் கொடுக்க எவ்விதக் காரணமுமில்லை. ஆதலின், மிஸ்டர் ஹீராலால் காந்தி இஸ்லாத்தைத் தழுவியதால் அவர் முக்திக்குரிய வழியை அடைந்துவிட்டார் என்ற முறையில் நாம் சந்தோஷப்பட வேண்டியதுதான். ஆயினும், அளவுக்கு மீறிய பெரிய சம்பவமாக நாம் அதனைக் கருதுவதற்கில்லை. ஆனால், அவர் இஸ்லாத்தைத் தழுவியதன் பயனாக விளைந்த காரியமானது இச்சம்பவத்திற்கு அதிக முக்கியாம்சத்தைக் கொடுத்திருக்கிறது. அதனைப்பற்றி மாத்திரம் ஈண்டு சிறிது கவனிப்போம்.

மிஸ்டர் ஹீராலால் காந்தி இஸ்லாத்தைத் தழுவி அப்துல்லா காந்தி என்று நாமம் சூட்டிக் கொண்ட சமாச்சாரம் காந்திஜீயின் பிரபல சிஷ்யரும் ஹீராலால் காந்தியின் ஆப்த நண்பருமான பண்டிட் ஜனார்தனதாஸ் என்பவருள்ளத்திற் பேரிருள்போலிருந்தது. இச்சமாச்சாரத்தைக் கேட்டவுடனேயே அவர் காந்திஜீக்குக் கடிதம் எழுதித் தனது "அளவற்ற துக்கத்"தைத் தெரிவித்துக்கொண்டார். இவரது இத்துக்கம் இவரைச் சும்மா இருக்கவிடவில்லை. இறுதியாக காந்திஜீயின் அனுமதியின்பேரில் நீண்டகாலமாகச் செய்துவந்த தமது ஹரிஜன ஊழியத்தை விட்டு ஜனாப் அப்துல்லா காந்தியை மறுபடியும் ஹிந்து மதத்திற் சேர்த்துவிடுவதற்காக பம்பாய் நகருக்குச் சென்றார். அங்குசென்று ஜனாப் அப்துல்லா காந்தியைப் பன்முறை கண்டு இஸ்லாம் மதத்தைப்பற்றிச் சம்பாஷணை செய்ததின்பயனாக ஹீராலால் காந்தி சுத்திசெய்யப்பட்டு ஹிந்து மதத்திற் சேருவதற்குப் பதிலாக பண்டிட் ஜனார்தனதாஸின் இருதயத்தை மூடிக் கொண்டிருந்த அஞ்ஞானம் என்ற திரை அகன்று இஸ்லாத்தின் மெஞ்ஞான ஜோதியால் அவரது உள்ளம்பிரகாசித்து விட்டது. ஆகவே, அவர் பகிரங்கமாக இஸ்லாத்தைத் தழுவிவிட்டார். இச்சம்பவமும் நமக்குப் புதுமையை அளிக்கவில்லை. ஏனெனில், இஸ்லாத்தின் சரித்திரப் புத்தகத்தில் இம்மாதிரியான நூற்றுக்



கணக்கான சம்பவங்கள் எழுதப்பட்டிருக்கின்றன. இஸ்லாத்தின் அழகும் வனப்பும் பார்வைக்குத் தெரியாமலிருந்தவரை ஜனங்கள் அதனை வேருடன் பிடுங்கி எறிந்துவிடவே முயற்சி செய்வதும், பிறகு, சத்தியம் தனது பிரகாசத்தைக் காண்பித்தவுடன் பெரும் பெரும் வம்பர்களுடைய சிரங்களும்கூட அதற்குப் பணிந்துவிடுவதும் சர்வசாதாரணமாகவே இருந்துவருகிறது. சில நிமிஷங்களுக்கு முன்புவரை இஸ்லாத்திற்குக் கொடும் பகைவராக இருந்தவர்கள் ஒரே ஒரு சத்தியத்தொனியின் பயனாகத் தங்களது மனத்தை மாற்றிக்கொண்டு இஸ்லாத்தின் ஞானதீபத்திற்கு விளக்குப் பூச்சிகளாகி அதில் மடிவதை உலகம் பலமுறை கண்டுகளித்திருக்கிறது.

ஹஜ்றத் உமர் (றலி.) அவர்கள் இஸ்லாத்தைத் தழுவுவதற்குமுன் இஸ்லாம் என்ற பெயரைக்கூடக் காதாரக் கேட்கச்சகியாத அவ்வளவு பெரும் பகைவராக இருந்தார்கள். இஸ்லாம் நாளுக்குநாள் வளர்பிறைச் சந்திரனைப்போல் பெருகி வருவதைக் கண்டு மனஞ்சகியாதவராகி இஸ்லாத்தைத் தழுவுபவர்களைப் பலவந்தமாக அடித்துத் தொந்தரை செய்து வதைத்தார். அவர் அப்படி வதை செய்தும் இஸ்லாத்தைத் தழுவிய எவரும் இஸ்லாத்தைவிட்டுத் திரும்பாதிருப்பதைக் கண்டு இஸ்லாத்தின் சத்தியத் தலைவரான திருநபி (ஸல்.) அவர்களையே வேலை தீர்த்துவிட வேண்டுமென்ற நோக்கத்தால் உடைவாளணிந்து இறுதிநபியின் இருப்பிடம் நோக்கிச் சென்றார். இதன்பயன் என்னவாயிற்று என்பதை நீங்கள் கவனித்துப் பாருங்கள்? அவரது செவிகளில் திருகுர்ஆனின் சங்கநாதம் நுழைந்தவுடன் அவரது இருதயம் நடுநடுங்கிற்று. அவரது நாவிலிருந்து பரிசுத்த திருகலிமாவின் ஓசை முழங்கிற்று. இஸ்லாத்தை அழிக்கச் சென்றவர் இஸ்லாத்திற்காகத் தன்னை அழிக்க முன்வந்தார்.

விஷயத்தையறிந்து கொண்டு செல்வதற்காக அபிசீனியாவிலிருந்துவந்த இருபது கிறிஸ்துவர்கள் திருகுர் ஆனின் திருவசனங்களிற் சிலவற்றைக் கேட்ட மாத்திரத்தில் தங்களுள்ளத்தை நபிகள் கோன் (ஸல்) அவர்களுக்கு அற்பணம் செய்து விடுகிறார்கள். அவர்களது நேத்திரங்களிலிருந்து அவர்களை அறியாமலே ஜலம் தாரைதாரையாக ஓடவாரம்பித்து விடுகிறது. உடனே, இஸ்லாம் மதத்தைத்தழுவி ஐக்கியமாகி விடுகிறார்கள். "நீங்கள் முஹம்மது (ஸல்) உடைய சாதுர்யமான பேச்சைக் கேட்டு உங்களது பூர்வீக மதத்தைத் துறந்து விடுகிறீர்களா? நீங்கள் மகாப் பெரிய மடையராகவன்றோ இருக்கிறீர்கள்" என்று இஸ்லாத்தின் விரோதிகள் அவ்விருபது புண்ணியவான்களையும் நோக்கிக் குத்திப் பேசுகிறார்கள். இவர்களது இந்த நொடிப் பேச்சுக்களை அவர்கள் லக்ஷியம் செய்யாமல் "நாங்கள் சச்சரவு செய்ய விரும்ப வில்லை; உங்களுக்கு உங்கள் மதம் எங்களுக்கு எங்கள் மதம் இருக்கட்டும்" என்று கூறி விடுகிறார்கள்.

அறபி தேசத்திலுள்ள பிரபல வித்துவானான "துபைலுப்னு அம்று" என்பவர் மக்காபுரிக்கு விஜயஞ் செய்கிறார். அவரது விஜயத்தைக் கேள்விப்பட்ட குறைஷித்தலைவர்கள் அவரிடம் சென்று "ஜாக்கிரதை! முஹம்மது என்பவரிடம் நீங்கள் செல்லக்கூடாது. அவரிடம் சென்றால் உம்மை அவர் வசியம் செய்து விடுவார்" என்று கூறி அவருக்கு எச்சரிக்கை செய்கிறார்கள். தற்செயலாக அவர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களது திருநாவிலிருந்து திருகுர் ஆனின் வசனங்களிற் சிலவற்றை ஹறம் ஷரீபில் செவியேற்கிறார். உடனே அவர் இஸ்லாத்தைத்தழுவி இஸ்லாத்தின் தாசராக மாறி விடுகிறார்.

இவை போன்ற சம்பவங்கள் இஸ்லாத்தின் சரித்திரத்தில் நூற்றுக்கணக்காக மல்கிக்கிடக்கின்றன. இவை அக்காலத்தில் மாத்திரம் நிகழவில்லை. இஸ்லாத்தின் காந்த சக்தியானது இவை போன்ற அநேகம் அற்புதங்களை எல்லாக்காலத்திலும் செய்து கொண்டே இருக்கிறது. ஆதலின், இன்று இஸ்லாத்தின் காந்த சக்தியானது பண்டிட் ஜனார்தனதாஸின் இருதயத்தைக் கொள்ளை கொண்டது ஆச்சரியமான சம்பவ மன்று. என்றாலும், இதிலிருந்து தெரிந்து கொள்ள வேண்டிய விஷயம் மற்றொன்றுளது.

இஸ்லாமும் குப்றும் பிரகாசத்தையும் இருளையும் போலிருக்கின்றன. மனிதன் இருளுக்குள்ளிருக்கும்வரை அவனுக்கு பிரகாசத்தின் அருமை தெரியாது. ஆனால் அவன் பிரகாசத்தில் வந்த பிறகுதான் அவன் இதுவரை பெரும்பாக்கியத்தை அடையாமலிருந்ததாக உணருகிறான். இதுபோல, குப்றிலிருப்பவர்கள் இஸ்லாத்தில் இருக்கிற மன நிம்மதியையும் ஆத்ம சாந்தியையும் உணருவதில்லை. ஆனால், குப்றென்னும் இருளை விட்டு ஈமான்

இஸ்லாமென்னும் பிரகாசத்தில் வந்தவுடன் அவர்களுக்குக்கண் திறந்து விடுகின்றது. இதுவரை கழிந்த அவர்களது ஜீவியமானது இருளுக்குள்ளிலேயே கழிந்திருக்கிறது என்பதை உணருகிறுர்கள். ஆனுல், வாழையடி வாழையாக இஸ்லாத்திலேயே இருப்பவர்கள் அதாவது முஸ்லிம் பெற்ளுேர்களுக்குப் பிறந்து முஸ்லிமாகவே இருந்து வருபவர்கள் இதன் அருமையை நன்கு உணர்ந்து கொள்ளமுடியாது. ஆனுல் தனது ஆராய்ச்சியின் பேரிலும், சத்திய மதத்தைக் கண்டுபிடிப்பதற்காகத் தேடியலைந்த பின்னரும் இப்பெரும்பேறை அடைபவர்கள் இஸ்லாத்தைத் தழுவியவுடனேயே இருளிலிருந்து திடீரெனப் பிரகாசத்தினுள் வந்து விட்டதாக அல்லது அருவயான இடத்திலிருந்து வனப்பும், மனத்தைக் கவரத்தக்க அழகும் பொருந்திய நந்தவனத்தினுள் பிரவேசித்ததாக உணருகிறுர்கள். இதனுல்தான் பரம்பரை முஸ்லிம்களைப் பார்க்கினும் புதிய முஸ்லிம்களினுள்ளத்தில் இஸ்லாமியப் பிரசாரம் செய்ய வேண்டுமென்ற உணர்ச்சி அதிகமாகத் ததும்பிக் கொண்டிருப்பதை நாம் காண்கின்ருேம். ஏனெனில், குப்று, ஷிர்க்கு ஆகிய அருவை அழுக்குகளைப் பற்றி அவர்களுக்கு நேர் முகமான அனுபவ அறிவு இருப்பதுடன், மனித வர்க்கம் அனைத்தின்பாலும் அவர்களுக்கு அபிமான உணர்ச்சியை இஸ்லாம் உற்பத்தி செய்துவிடுகிறது. ஆகவே, அவர்கள் குப்றெனும் களங்கத்தை விட்டு விடுதலையடைந்ததுபோல மனிதவர்க்கம் அனைத்துமே விடுதலை பெற வேண்டும் என்று இயற்கையாகவே விரும்புகிறுர்கள்.

இவ்வியற்கைக்கேற்ப பண்டித ஜனர்தனதாஸின் இருதயத்தில் இஸ்லாத்தின் ஞானஒளி தனது தண்கதிர்களைவீசியவுடன் தனது குடும்பத்தாரையும் இதர ஹிந்துக்களையும் இஸ்லாத்திற் சேர்ப்பதற்கான பிரசாரத்தைத் தொடங்கிவிட்டார். ஆகவே, மூன்று நாட்களுக்குள் அவரது குடும்பத்தாருட்பட 1200 ஹிந்துக்கள் இஸ்லாத்தைத் தழுவிவிட்டனர். இவர்களை இஸ்லாத்திற் சேர்ப்பதற்காக பெரும் பொக்கிஷத்தைக் காலிசெய்யவேண்டிய அவசியமோ வாளாயுதத்தை உபயோகிக்க வேண்டிய நிர்ப்பந்தமோ ஏற்படவில்லை. இஸ்லாத்தின் மகிமையையும் சிறப்பையும்பற்றி அவர் செய்த சொற்பொழிவொன்று மட்டிலுமே அவர்களது நேர்வழிக்கான பாதையைத் திறந்துவிட்டது. இஸ்லாம் வாள் வலிமையால் பரத்தப்பட்டதென்று கூறிவரும் இஸ்லாத்தின் விரோதிகள் இச்சம்பவத்தைப் பிரத்தியக்ஷமாகக் கண்ட பின்னரேனும் இஸ்லாத்தின்பால் பழி சுமத்துவதை விட்டொழிப்பார்களாக. இவ்வண்ணம் ஓரிடத்தில்மட்டும் நிகழவில்லை. உலகமெங்குமே இது போழ்து முஸ்லிமல்லாதார் கூட்டங்கூட்டமாக இஸ்லாத்தைத் தழுவும் செய்தி சமாச்சாரப் பத்திரிகைகளில் பிரசுரிக்கப்பட்டுக் கொண்டிருக்கின்றன. இவைகளைக் கேட்டு முஸ்லிம்கள் ஆனந்தமடைவதியற்கை. ஆனுலும், முஸ்லிம்களுக்கு இதில் பெரும் சோதனை இருக்கிறது. அதில் அவர்கள் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். இஸ்லாத்திற்கேற்பட்டுவரும் இவ்வெற்றியைக்கண்டு அதன் விரோதிகள் புழுக்கங்கொள்வர். தங்களது நோக்கம் சித்தியடையாத இடத்தில் தங்களது எதிரிகளுக்குத் தீங்கு செய்ய முயலுவது இவ்வுலகம் தோன்றியதுமுதல் நடைபெற்றுவரும் வழக்கமாக இருந்து வருகிறது. இவ்வழக்கத்திற்கேற்ப இஸ்லாத்தின் விரோதிகள் முஸ்லிம்களுக்கு அநேகம் விதத்தில் தொந்திரைகளையும் கஷ்டங்களையும் விளைவித்து முஸ்லிம்களுக்குத் தீங்குசெய்வர். இதில் நம்மவர் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும் என்பதை அறிவித்துக்கொள்கிருேம்.

---

## அன்பர்கட்கு !

தற்சமயம் நமது ஆபீஸ் இருக்கும் போஸ்டாபீஸ் தெருவு 43-A. நெ. இலக்கமிட்ட இடத்திற்கு A - ஐ எடுத்துவிட்டு 43 நெ. என்று மட்டில் குறிப்பிட்டிருப்பதால் அன்பர்கள் 43 நெ. போஸ்டாபீஸ் தெரு என்றே குறிப்பிடும்படி கோருகிருேம்.

# காதியானி இயக்கமும் அதனை எதிர்க்கும் மார்க்கமும்

(மௌலவி மஸ்ஊதுர் ரஹ்மான் சாஹிப் வரைவது)

காதியானி இயக்கம் முஸ்லிம்களுக்கும் இஸ்லாமிய ராஜீயத்திற்கும் சமூகத்திற்கும் மிகவும் அபாயகரமான இயக்கமாகும். இந்த இயக்கம், நூற்றுக்கணக்கான வருஷங்களாகக் கிறிஸ்தவ பாதிரிமார்கள் இஸ்லாத்திற்கு விரோதமாகச் செய்து முடிக்காத காரியங்களை நமது கண்ணின் முன்னிலையில் சில வருஷங்களுக்குள் செய்து முடித்துவிட்டது. காதியானி இயக்கம் இஸ்லாத்தின் உயிருக்கும் சமூகக் கட்டுப்பாட்டிற்கும் ஒற்றுமையாக இல்லை. அது தனிப்பட்ட முறையில் அரசாங்கத்தின் உதவியைப் பிரத்தியேகமாக அடைந்துகொண்டிருக்கிறது. அரசாங்க நிர்வாக விஷயத்தில் இக்கொள்கையுள்ள படித்தவர்கள் நெருங்கிய சம்பந்தம் வைத்துக்கொண்டு ராஜீயமிஷனை பூரணபலத்துடன் நடத்திக்கொண்டிருக்கின்றனர். அல்லாமா ஸர் முஹம்மது இக்பால் கூறியதுபோல் இந்த இயக்கம் கலப்பற்ற சுத்தமான மத இயக்கமன்று. இதனுடைய கட்டிடம் ராஜீய அஸ்திவாரத்தின்மீது எழுப்பப்பட்டிருக்கிறது. இவ்வியக்கம் தானுக உண்டாகவில்லை. விசேஷமாக ஒரு சக்தியின் கண்ஜாடையின் பேரிலேயே இதனுடைய தோற்றம் வெளியிற் கிளம்பிற்று. காதியானி இயக்கத்தின் கர்த்தா மிகவும் சாதுர்யமாகத் தனது மதசம்மந்தத்தை மட்டிலும் வெளிக்குப் பிரகாசமாகக் காண்பித்தும், ராஜீய சம்மந்தத்தை இயன்றவரை சகல வழிகளிலும் மறைப்பதற்கு முயற்சி செய்தும் இருக்கிறுர். இவ்விதச் சமர்த்தின் காரணமாக நமது சங்கைக்குரிய கண்ணியம் மிக்க உலமாக்கள் மதசம்மந்தமான ஆயுதங்களை அணிந்து அவர்களை எதிர்ப்பது இஸ்லாத்திற்குச் செய்யும் மிக மிகச் சிறந்த ஊழியம் என்பதாகக் கருதுகின்றனர். ஹஜ்றத் ஈஸா (அலை.) அவர்கள் விண்ணிலிருந்து இறங்கி வருதல், அவர்கள் ஜீவித்திருத்தல், மரணமடைதல், மஹ்தீ மஸீஹ், மஸீஹுத்தஜ்ஜால், மஸீஹுக்குரிய அம்சங்கள் முதலியவைகளைப்பற்றிய விவாதங்களிலிறங்குகின்றனர். இவ்வியக்கத்தாருக்கு ராஜீய சம்பந்தமான பலமிருப்பதால் இவ்விவாதங்களால்மாத்திரம் இவர்களை வெல்லமுடியாது. ஆதலால்தான் இவ்விவாதங்ளால் குறிப்பிடத்தக்க பயன் ஏற்படுவதில்லை. மேலும், இவ்விவாதங்களின் பலனுக பாமரஜனங்கள் சந்தேகங்களிலும் ஐயங்களிலும் அகப்பட்டுக்கொள்கின்றனர்.

காதியானி இயக்கம் என்பதென்ன? அதன் அஸ்திவாரங்கள் சரியா தப்பா? என்ற விஷயங்களைப்பற்றி நாம் இங்கு விவாதிக்க விரும்பவில்லை. சங்கைவான்களாகிய உலமாக்கள் காதியானியத்தை வேரறுப்பதற்காக இதுவரை செய்த முயற்சிகள் பயன்பெற்று அதுவேறற்றுப் போகாததற்குக் காரண மென்ன? இவ்வியக்கத்தின் உயிர்நாடியில் கை வைப்பதற்கான வழியென்னவென்பதைக் கூறுவதே நமது நோக்கமாகும். உலமாக்கள் செய்தமுயற்சிகளெல்லாம் அவர்களது உயிர்நாடியில் கை வைக்காமலிருப்பதனுலும், அவர்களது நாடி எவ்வளவிருக்கிறதென்பதைக் கண்டுகொள்ளாதிருப்பதினுலும் அவர்களை எதிர்ப்பதற்காக உலமாக்கள் செய்த முயற்சிகளெல்லாம் உத்தேச பலனைத் தரவேயில்லை. இந்த இயக்கம் அதிசீக்கிரத்தில் செத்துப்போக வேண்டும் என்பது நமது கருத்தாகும். இல்லையேல், இவ்வியக்கத்தின் ஓட்டத்தில் முஸ்லிம்களது ஒற்றுமையும் இஸ்லாமிய உஸுல்களும் அடித்துக்கொண்டு போகப்பட்டுவிடும். இன்னும் அது மரித்துப்போவதற்குமுன் அநேகம் பேரை அடித்துப்போடும் என்பதும் நமது கருத்தாகும். அத்துடன் சங்கைவான்களாகிய உலமாக்கள் இவ்வியக்கத்தை எதிர்த்துச்செய்யும் முயற்சிகளும் அவ்வளவாகமுழுப் பயன் தருவதாக இல்லை என்பதும் நமதபிப்பிராயம். இந்த இயக்கத்தை ஒழிப்பதற்காகச் செய்யப்படவேண்டும் என்று நாம் கருதுகிற முறை

கள் ஒருக்கால் சங்கைவான்களான உலமாக்களிடம் ஒப்புக்கொள்ளப்பட மாட்டாதனவாக இருந்தாலும், அம்முறைகள்தான் காதியானியத்திற்கு எதிரான பயன்படத்தக்க சரியான ஆயுதங்கள் என்பது நமது கருத்து. ஏனெனில், இம்முறைகள் வெளிப்பகட்டானவைகளுமன்று; சந்தோஷ ஆரவாரமானவைகள் போன்றதுமன்று. இது ஸ்திரமானதும் பலமுள்ளதுமாகும். இவைகளைச் செய்வதற்கு உறுதியும், காரியசக்தியும், கல்வித்திறமையும் இருப்பது அவசியமாகும்.

காதியானியத்தைப் பரப்புவதற்கு அவர்கள் கையாளும் கருவிகள் யாவை? என்பதை முதலில் கவனிக்கவேண்டும். அப்பால் நாம் அதற்கு எதிரான வழிகளைத் தயார் செய்யவேண்டும். பாஷாணத்திற்குப் பரிகாரம் மாதுளம் பழஷர்ப்பத்தல்ல. திர்யாக் என்ற முறிவு பதார்த்தத்திலேயே இருக்கிறது. கெட்டுப்போன நரம்பைப் பார்த்துச் சரியாக வெட்டிவிடவேண்டும்.

1. காதியானி இயக்கம் மேலோங்குவதற்கு அவர்கள் அரசாங்கத்திடம் செல்வாக்குப் பெற்றிருப்பதும் ஒரு காரணமாகும். ஆங்கிலேயர்கள், ஆங்கிலோ-இந்தியக் கிறிஸ்துவர் ஆகியவர்களை அரசாங்கம் எவ்விதமாக நேசிக்கின்றதோ அவ்விதமாக இக்காதியானிகளையும் அரசாங்கம் நேசிக்கிறது. ஏனெனில், இந்த ஜமாஅத்தார்கள் அரசாங்கத்திற்குப் பேருபகாரம் செய்திருக்கிறார்கள். 'ஜிஹாது' போன்ற அபாயகரமான காரியத்தை இல்லையென்று மாற்றி சுதந்திரம் சுயேச்சை ஆகியவைகளுக்குரிய மார்க்கங்களனைத்தையும் அடைத்துப்போட்டார்கள். இப்பேருபகாரத்திற்குப் பதிலாக அரசாங்கம் காதியானிகளைப் பெருவாரியான அளவிற்கு வேலைக்கொடுத்துக் கொண்டு, அரசாங்க நிர்வாகத்தின் முக்கிய இடங்களில் நிறுத்திவைத்திருக்கிறது. இதன்பயனாக, உத்தியோகம் வாங்குவதற்காக ஏழையாகவும், இஸ்லாம் மதத்தைப் பற்றி அறியாதவர்களாகவுமுள்ள படித்த முஸ்லிம்கள் 'காதியானிய்யத்' என்ற உடையணிந்து உத்தியோகங்களை அடைவதில் வெற்றிபெறுகிறார்கள். இம்முறையில் இப்பொழுது இக்காரியம் நடைபெற்றுக்கொண்டிருக்கிறது. ஆதலின் காதியானி இயக்கத்தில் சேருகிற எவனும் கஷ்டமடையமாட்டான் என்பதும், உத்தியோகம் கிடைக்காமல் திண்டாடமாட்டான் என்பதும் பொது விதியே போலாகிவிட்டது.

எனவே, காதியானி இயக்கம் பரவும் விஷயத்தில் உத்தியோகப் பதவிகளுக்கு நெருங்கிய சம்மந்தமிருக்கிறது. இதற்குப் பரிகாரம் செய்வதானது தந்திரத்தைக் கையாளுவதினாலேயே ஏற்படக்கூடியதாகவிருக்கிறது. எனவே, காதியானியத்தும் சுயேச்சையும் நெருப்பையும் ஜலத்தையும் போலிருப்பதால் முஸ்லிம்களது உள்ளத்தில் சுயேச்சையுணர்ச்சியை வளரச் செய்ய வேண்டும்.

2. காதியானிகள் ஐரோப்பாவிலுள்ள ஒவ்வொரு மைதானிலும் காணப்படுகின்றனர். இதுவும் அவ்வியக்கம் பெருகுவதற்கு மற்றொரு காரணமாகும். இவர்கள் ஆங்கிலத்தில் திருகுர் ஆனை மொழி பெயர்த்துப் பிரசுரித்து ஐரோப்பா முழுவதிலும் பரவச் செய்திருக்கிறார்கள்; கிறிஸ்துவ மதத்தை மறுத்துப்பலமான ஒரு மாசிகையைப் பிரசுரித்து வருகிறார்கள்; பத்திரிகைகளையும் சஞ்சிகைகளையும் நடத்துகிறார்கள்; பிரசாரசபைகளை உலகமெங்கும் ஸ்தாபித்தார்கள்; திறமையான பிரசாரகர்களின் கூட்டத்தைத் தயார் செய்தனர்; மதசம்மந்தமான ஒவ்வொரு மைதானத்தையும் அவர்கள் கைப்பற்றிக்கொண்டனர் என்றுகூறுகின்றனர். இவ்வியக்கத்தில்சேருபவர்கள் இக்குழாத்தினர் ஐரோப்பாவில் செய்த காரியங்களையே முக்கியமாகக்கவனிக்கின்றனர். ஹஜ்றத் ஈஸா (அலை) அவர்கள் இன்னமும் உயிருடனிருக்கிறார்களா அல்லது மரணமடைந்து விட்டார்களா என்ற விஷயத்தை அவர்கள் அறியமாட்டார்களாதலின், காதியானிகள் ஆங்கிலத்தில் திருகுர்ஆனை மொழி பெயர்த்து இஸ்லாத்திற்கு ஏதோ மிகப்பெரிய ஊழியம் செய்திருக்கிறார்கள் என்றே நினைக்கின்றார்கள். ஆகவே, இஸ்லாமிய உலமாக்களும் இதே ஊழியத்தைத் தங்கள் கையில் வாங்கிக் கொள்ளவேண்டும். முன்னேறி வந்து இது போன்ற வெளிப்பகட்டான வேலையைச்செய்து அவர்களைத் தோற்கடிக்க வேண்டும். அசல் வேலை இப்பொழுதுதான் ஆரம்பமாகி இருக்கிறது என்பதைக் காட்டிக்கொள்ள வேண்டும். இதற்கு முந்தித் தவறிப்போனவைகளை நிவர்த்தி செய்து விட்டால் இஸ்லாமிய உலகத்தின் ஒத்துழைப்பும் கிடைக்கும். இதன் காரணமாக இஸ்லாமிய ராஜீய விஷயங்களுக்கும் பலமேற்படும். இப்படிச் செய்தால் பயங்கரமான இக்கூட்டம் மைதானத்தை விட்டுப் புறங்காட்டி ஓடிவிடும். சங்கைவான்களான உலமாக்கள் இம்மாதிரியான



அரிய ஊழியங்களைச் செய்வார்களாயின் காதியானியத்து தானாக அழிந்து விடும் என்பது நிச்சயம்.

குறிப்பு:—இவ்வியாசக்கர்த்தா கூறியுள்ள ஆலோசனைகளை சங்கைவான்களானஉலமாக்கள் இதற்கு முன்பே உணர்ந்து வேண்டிய ஏற்பாடுகளைச் செய்திருக்கிறார்கள். காதியானிகளைத் தனிச் சமூகமாகப் பிரித்து விடுவதால் முஸ்லிம்களின் வகுப்புவாரி உத்தியோகப் பதவிகளை அவர்கள் அடைய முடியாது என்பதையுணர்ந்து காதியானிகளைத் தனிச் சமூகமாகப் பிரித்துவிடவேண்டுமெனச் சட்டசபை மூலம் முயற்சி செய்திருக்கிறார்கள். ஆங்கில பாஷையில் திருகுர் ஆன் வியாக்யான உரை பல எழுதப்பட்டுமிருக்கின்றன. இப்பொழுதும் விரிவான வியாக்யானம் எழுதப்பட்டும் வருகிறது. ஆங்காங்கு பல சஞ்சிகைகளும் பத்திரிகைகளும் பிரசுரிக்கப்படுகின்றன. ஐரோப்பா, ஆப்பிரிக்கா, அமெரிக்கா முதலிய தூர நாடுகளில் பிரசார சபைகளும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. ஆனால், இவைகளெல்லாம் கட்டுக்கோப்பாக இருந்து ஒரே முகமாக வேலை செய்து, தங்களது அரிய ஊழியங்களை உலகம் மெய்ப்பித்துக்காட்டிக்கொள்ளாதது ஒன்றுதான் இவர்களது குறை. இவர்கள் சன்மார்க்கத்திற்காகப் புண்ணியத்தை நாடி இவைகளைச் செய்வதால் இவைகளை உலகத்தார் மெய்ப்பித்துக் காண்பித்துக்கொள்வதில்லை. (பர்).

---

# மதமும் ராஜீயமும்.

(அமீர் ஷக்கீப் அர்ஸலான்.)

முன்னேற்றமடைந்த தேசத்தினர் யாவரும் ராஜீயத்தை விட்டு மதத்தை முற்றிலும் தனியே பிரித்து விட்டனர்; அவர்கள் மதத்தை முற்றிலும் கைகழுவி விட்டனர்; அல்லது அது சம்மந்தமாக மிகவும் அசிரத்தையுடன் அல்லது சம்பிரதாயத்திற்காகக் காரியம் செய்து வருகின்றனர், என்று ஒரு அபிப்பிராயம் ஜனங்களிடை பலமாகப் பாவி இருக்கிறது. இவ்வபிப்பிராயம் பிரசங்கங்கள் மூலமாகவும் வியாசங்கள் மூலமாகவும் மிகவும் அதிகமாகப் பிரசாரம் செய்யப்படுவதால் கீழ்நாட்டினர் பொதுவாகவும், முஸ்லிம்கள் சிறப்பாகவும் இதனை மெய்யென்று நம்பி ராஜீயத்தை விட்டு மதத்தைப் பிரிக்காவிடில் உலக முன்னேற்றம் குதிரைக் கொம்பேயாகும் என்றும், ஐரோப்பாவின் தற்போதைய முன்னேற்றம் மதத்தைக்கைவிட்டதன் பலனேயாகுமென்றும் நம்பிக் கொண்டிருக்கின்றனர்.

இவர்களுடைய இவ்வெண்ணத்திற்கு மாறாக இஸ்லாத்தின் போதனைகளிலிருந்து கொண்டிருப்பதாய் இவர்கள் இஸ்லாம் மதத்தைப் பற்றிக் குறை கூறவும் தொடங்கி விட்டனர். இஸ்லாம் மதத்தில் தீனும் துன்யாவும் ஒன்றோடொன்றிணைக்கப் பட்டிருப்பதால்தான் முஸ்லிம்கள் க்ஷீணதசையடைந்து விட்டனர் என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். முஸ்லிம்கள் தங்கள் மார்க்கத்தைக் கடைப்பிடித்தொழுகும்வரை அவர்கள் ஒரு போதும் முன்னேற்றமடையவே முடியாது என்றும் பகிரங்கமமாகக் கூறுகின்றனர். இவ்வித எண்ணம் முற்றிலும் தவறாகும். நாடு பிடிக்கும் ஆசையுள்ளவர்கள் தங்களது பிரசாரகர்கள் மூலம் தங்களது ராஜிய நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்வதற்காக இது போழ்து முஸ்லிம்களிடம் மிகவும் தீவிரமாகப் பிரசாரம் புரிந்து வருகின்றனர். ஐரோப்பா இதற்கு முன் மதத்தை விட்டதுமில்லை; இப்பொழுதேனும் விட்டிருக்கவுமில்லை. ஐரோப்பாவிலுள்ள போல்ஷிவிக்கர்களை ஒதுக்கித் தள்ளிவிட்டுப்பார்த்தால் தற்போதைய ஐரோப்பிய அரசாங்கங்கள்மதத்தைப் பாதுகாத்து ஆதரிப்பதைத்தங்களது பரிசுத்த கடமையாகக் கருதுகின்றன வென்றும், கிறிஸ்தவப் பிரசாரங்களுக்கு அவைகள் கைகொடுத்து உதவி செய்கின்றன என்றுங் கூறுவது முற்றிலும் சரியேயாகும். எந்த மதத்தையும் பின் பற்

ருத ஜனங்கள் ஐரோப்பாவில் நூற்றுக் கணக்காக இருக்கிறார்களென்பதுண்மையே. ஆனால், இவர்கள் பெருபாலும் பொதுவுடமைக்காரர்களுடன் சம்மந்தம் வைத்தே இருக்கிறார்கள். இவர்கள் எல்லா இடங்களிலும் சிறு பான்மையினராகவே இருக்கின்றனர். ஆகவே ஐரோப்பாவிலுள்ள மிகவும் பெரும்பான்மையான ஜனங்கள், முஸ்லிம்களாகிய நாம் இஸ்லாம் மதத்தைப்பின் பற்றி ஒழுகிவருவது போலவே கிறிஸ்துவ மதத்தைப் பின்பற்றி வருகின்றனர். ஆனால், கிறிஸ்துவர்கள் தங்கள் மதத்தைப் பிரசாரம் செய்து நாடெங்கும் பரவச்செய்வதற்காக வருடந்தோறும் லக்ஷக் கணக்கான ரூபாய்களைச் செலவு செய்கின்றனர். ஆனால், முஸ்லிம்களாகிய நாம் அப்படி இல்லை. இஸ்லாத்தின் பாதையில் செலவு செய்வதற்காக உலகமெங்கு முள்ள முஸ்லிம்கள் எல்லோரும் ஒன்றுகூடினாலும் பதினாயிரம் பவுன்களைக்கூட ஒன்று திரட்டுவது மகாச் சிரமமாகிவிடும். இதுதான் கிறிஸ்தவர்களுக்கும் முஸ்லிம்களுக்குமிடையிலுள்ள வித்தியாசம்.

எவ்வாறாயினும், ஐரோப்பா மதத்தைக்கை விட்டு விட்டது என்று கூறுவது முற்றிலும் தப்பாகும். இப்பொழுதும் ஐரோப்பா மதத்தைப்பூரணமாகப் பின்பற்றி அதனைப் பலமாக ஆதரித்து வருகிறது. ஆனால், ஐரோப்பா நிர்வாக முறையில் மதத்தை ராஜியத்தை விட்டு ஒதுக்கி வைத்திருக்கிறது. ஆகவே, மதமும் ராஜியமும் வெவ்வேறு என்று ஐரோப்பிய அரசாங்கம் கூறுமாயின் அதற்கு, மதத்தைக்கை கழுகிவிட்டதாக அர்த்தம் செய்யவே கூடாது. நிர்வாகத்தைத் திறமையாக நடத்துவதற்காக ஒவ்வொரு இலாக்காவையும் வெவ்வேறாகப்பிரித்து வைப்பது போல மதத்திற்கும் ஒரு தனி இலாக்காவை ஏற்படுத்தி இருக்கிறது என்பதுதான் கருத்தாகும். இந்த மத இலாக்கா போப்,பிஷப் முதலியவர்களிடம் பூரண அதிகாரத்துடன் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. இவர்கள் மத விஷயங்களை அதிகம் தெரிந்தவர்களாகவும், மற்றவர்களைப் பார்க்கிலும் அதிகமாக மத ஊழியம் செய்யக் கூடியவர்களாகவுமிருக்கிறார்கள். நிர்வாக முறையில் மதத்தையும் ராஜியத்தையும் வெவ்வேறாகப் பிரிப்பதானது இஸ்லாம் மதத்தினுள்ளும் காணப்படுகிறது. இஸ்லாத்தில் அரசாங்க மந்திரிப் பதவியும் ஷெய்குல் இஸ்லாம் பதவியும் ஒரே ஒரு உத்தியோகப் பதவி என்று எவரேனும் கூறமுடியுமா? இஸ்லாமிய அரசாங்கங்களில் பற்பல இலாக்காக்களுக்கும் மந்திரிச் சபைகள் இருந்துவருவதுபோல மத இலாகாவிற்கும் மந்திரிச் சபை இருந்துவந்தது. இம்மந்திரி சபையானது மதசம்மந்தமான எல்லாக் காரியங்களையும் கவனித்துவந்தது. இம்மந்திரிச் சபைகள் எல்லாம் அவ்வக்காலத்திய கலீபாவின் கட்டளைக்குட்பட்டிருந்து கொண்டிருந்தன. இதே நிலைமைதான் ஐரோப்பாவிலுமிருந்து வருகிறது. அங்கு மதத்திற்கெனத் தனி இலாக்கா ஒன்றிருக்கிறது. அவ்விலாக்கா மத சம்மந்தமான எல்லாக் காரியங்களையும் கவனித்து வருகின்றது. ஆயினும், அதுவும் அரசாங்கத்திற்குட்பட்டதேயாகும். இஸ்லாமிய கலீபாவானவர் இஸ்லாம் மதத்தை ஆதரிப்பவராக இருந்ததுபோல ஐரோப்பாவிலுள்ள அரசர்களும் மந்திரிகளும் கிறிஸ்தவ மதத்தை ஆதரிப்பவர்களாக இருந்துவருகின்றனர்.

சென்ற மகாயுத்தத்திற்குப் பிறகு ஜெர்மனியில் புரட்சி ஏற்பட்டபோது புரோட்டஸ்டன்ட் கிறிஸ்துவ மாதாகோவில் ஒரு காலம் வரை தனது தலைவரான ஜெர்மனி அரசர் திரும்பி வந்துவிடுவார் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தது. ஜெர்மன் சக்கிரவர்த்தி நாட்டை விட்டுச்சென்று அதிக காலமாகிவிட்டதாலும், ஸர் ஹிட்லருக்குச் சர்வாதிகாரப் பதவி ஏற்பட்டு விட்டதாலும் அங்குள்ள நிர்வாக முறை முற்றிலும் புது மாதிரியில் திருத்தியமைக்கப்பட்டது. இவ்வாறு திருத்தி யமைத்ததால் அரசாங்கத்திற்கும் மாதா கோவிலுக்குமுள்ள சம்மந்தங்கள் முன்னிலும் அதிக ஆழமாக ஏற்பட்டு விட்டது. சென்ற சில மாதங்களாக அங்கு நடைபெறும் காரியங்களின் போக்கைக் கவனமாகப் பார்ப்பவர்களுக்கு மதத்தை அரசாங்கத்துடன் ஐக்கியப்படுத்தி விடுவதற்கான சட்ட திட்டங்கள் இயற்றப்பட்டு வருகின்றன என்பது தெரியவரும்.

சில காலத்திற்கு முன் பெர்லினிலுள்ள புரோட்டஸ்டன்ட் கிறிஸ்துவ மாதாகோவிலின் பிரதமத் தலைவர் செய்த பிரசங்கமொன்றில் பின் வருமாறு கூறி இருக்கிறார்:

"ஜெர்மனியிலுள்ள கிறிஸ்துவர்கள் உண்மையாகவே கிறிஸ்துவ மதத்தைப் பின்பற்றி வருகின்றனர். அவர்கள் கிறிஸ்துவ உடையில் விக்கிரக ஆராதனைக்காரர்களாகவோ அல்லது இணை வைப்பவர்களாகவோ இருக்கிறார்கள் என்று கூறுவது உண்மையல்ல. புரட்சி காலத்தின் இறுதியில் அடிப்படையான சில மாறுதல்கள் செய்யவேண்டும் என்ற அபிப்பிராயங்கள் வெளியிடப்பட்டன வென்பது மெய்யேயாகும். ஆனால், இவாஞ்சலிய மாதாகோவில் அரசாங்கத்துடன் முற்றிலும் ஐக்கியமாகி விட்டது. நமது அபிப்பிராயத்தில் தீனும் துன்யாவும் 'லௌகீகமும் வைதீகமும்' தனித்தனியே யுள்ள இரண்டு வெவ்வேறு காரியங்களல்ல; இரண்டும் ஒன்றேயாகும். ஆதலின், இவ்விரண்டும் ஒன்று சேருவதற்காகப் பிரத்தியேகமான உடன்படிக்கை செய்து கொள்ள வேண்டிய அவசிய மெதுவுமில்லை. ஆனால், இரண்டும் ஒன்று சேர்ந்து வேலை செய்வதற்கான மார்க்கங்களை உண்டுபண்ணுவது அவசியமாகும்''.

**"மதமும் ராஜீயமும் ஒன்று சேர்ந்திருப்பது தான் முஸ்லிம்களின் வீழ்ச்சிக்குக்காரணம்; ஆதலின், மதத்தை ராஜியத்தை விட்டுப் பிரித்து விடவேண்டும்'' என்று கொஞ்சமும் அஞ்சாமல் கூக்குரலிட்டுக் கொண்டு பிரசாரம் செய்து வரும் அறிவிலிகள் இப்பிரசங்கத்தை நன்கு கவனித்துப் படிப்பார்களாக. இந்த ஜனங்கள் உண்மையில் மதத்தின்பால் கண்லெண்ண முள்ளவர்களன்று; கெட்டெண்ணங் கொண்டவர்களேயாவர். மேலும், மதத்திற்கு விரோதிகளுமாவர். இந்த விபரத்தை அந்த ஜனங்கள் கவனிப்பார்களா? அல்லது இவர்கள் இஸ்லாத்தைப்பற்றிக் குறை கூறுவதற்கு முன் அவர்கள் மதத்தை விட்டு விட்டு கல்வி அறிவு முன்னேற்றம், நாகரீகம் ஆகியவைகளில் எவ்வளவு தூரத்திற்கு முன்னேற்ற மடைந்திருக்கிறார்கள் என்பதை ருஜீப்பித்துக் காண்பிப்பார்களா?**

---



## சுகாதாரம்—மலச்சிக்கல்

மலச்சிக்கல் என்பது ஒவ்வொரு மனிதனும் ஸ்திரீயும் குழந்தையும் தமது வாழ்நாளில் ஒரு நாளாகிலும் அனுபவிக்கக்கூடிய ஒரு சாதாரணமானதும், கஷ்டத்தைக் கொடுக்கும்படியானதுமான ஓர் அவஸ்தை. மலச்சிக்கலின் காரணங்களைச் செவ்வையாய் அறிவதற்கு ஜீரணத்தின் முறையை நன்றாய் அறியவேண்டியது அவசியம். நாம் உட்கொள்ளும் ஆகாரமானது முதல் முதல் வாயில் உமிழ்நீர்க் கோளங்களால் சுறக்கப்பட்ட உமிழ்நீர் என்னும் வஸ்துவுடன் கலந்து அங்கே கொஞ்சம் ஜீரணமாகிறது. ஆகாரத்தை நன்றாய் மெல்லவேண்டும். அதற்காக அல்லாஹ் தஆலா நமக்கு கூர்மையானதும், வலுவானதுமான பற்களை உற்பத்தி செய்திருக்கிறான். மெல்லுவது ஜீரணத்தைச் சுலபமாக்கி அதற்கு உதவி செய்வதுடன் மலச் சிக்கலையும் தவிர்க்கிறது. பிறகு, ஆகாரம் இரைப்பைக்குட் சென்று, அங்கே மூலாக்கினி நீருடன்கலந்து ஜீரணமாகிறது. ஆகாரம் இரைப்பையைத் தாண்டி குடலுக்குள் புகுந்து, அங்கு கல்லீரலிலிருந்து வரும் பித்தநீருடனும், கணையத்திலிருந்து வரும் கணையநீருடனும், குடலில் உற்பத்தியாகும் குடல்நீர்களுடனும் கலந்து ஜீரணமாகி, ரஸாயினிகள் என்று சொல்லப்பட்ட குழாய்கள் மூலமாய் இரத்தத்துள் உறியப்பெற்று, தேகத்தின் எல்லாப் பாகங்களுக்கும் பரவுகிறது. மிகுதியாய் ஜீரணமாகாததும், ஜீரணமாவதற்கு சாத்தியமில்லாததுமான கழிவிடைகள் புழுகுபோன்ற ஓர் அசைவினால் குடலில் தள்ளிக்கொண்டு போகப்படுகிறது. மலபாதைக்குப் போகவேண்டிய தருணத்தில் அதற்கு உட்காரும்போது, சுவாஸத்தை உள்ளுக்கிழுத்தால் அது டயபிராமை அமுக்குகிறது. இது கீழேயுள்ள குடலை அமுக்குகிறது. அடிவயிற்றின் சதைகள் சுருங்கி, முன்பக்கமாக அமுக்குகிறது. இதன் மூலமாய் வாயில் ஏற்றுக் கொண்ட ஆகாரத்தின் கழிவிடைகளும், கோலனில் உண்டாகும் கழிநீர்களும் தேகத்தைவிட்டு வெளியே தள்ளப்படுகின்றன.

ஆனதுபற்றி, ஆரோக்கியத்தின் இரகசியம் யாதெனில், மலபாதைக்கு வரும்போது உடனே அதைக் கழிப்பதேயாம். ஆகாரம் செவ்

வையாய் ஜீரணமாவதற்கு 8-மணி நேரம் செல்லும். ஆனதுபற்றி, ஒவ்வொருவரும் எட்டு மணிக்கொருதரம் மலத்தைக் கழிக்கவேண்டும். இவ்வாறாக, தினம் மூன்று வேளை ஆகாரமும், மூன்று வேளை மலவிஸர்ஜனமும் இயற்கையில் விதிக்கப்பட்டிருக்கிறது. ஆனால், உழைப்பும் குழப்பமும் மிகுந்துள்ள இம்மானிட வாழ்வில், இயற்கையாய் ஏற்பட்டுள்ள மூன்று வேளை மலவிஸர்ஜனத்தையடக்கி, காலை ஒரே வேளையில் செய்யப்படுகிறது. 'இயற்கைக்கு அடுத்தபடி பழக்கம்' என்கிற ஓர் வசனமுண்டு. ஜனங்கள் ஒருவேளை மலவிஸர்ஜனம் செய்வது வெகு நாளைய பழக்கத்தின்கீழ் வந்துவிட்டது. ஆனால், ஆகாரத்தைப்பற்றி என்ன? அதுமட்டும் மூன்று வேளையுடன் நிற்கிறதில்லை. நாக்கு எத்தனைதரம் கேட்கிறதோ, அத்தனைதரம் ஆகாரம் கொடுக்கப்படுகிறது. அதனால் ஜீரணக் கருவிகள் இடைவிடாமல் சதா உழைக்கும்படி நேரிடுகிறது. ஆயுள் முழுவதும் அதற்கு ஓய்வு என்பதே கிடையாது. 'எப்போதும் விளையாடும் பையன் மந்தபுத்தியுள்ளவனாவான்' என்று சொல்வதுண்டு. அதேபோல், ஓய்வு என்பது இல்லாமல் எப்போதும் உழைக்கும் ஜீரணக்கருவிகள் மெலிந்து நோய்க்குட்படுகின்றன.

மலச்சிக்கல் உண்டாகக்கூடிய காரணங்கள் யாவையெனில் :—(1) கல்லீரல் நோயடைந்து பித்தநீர் சுரப்புக் கம்மிப்பட்டு, அதனால் கழிவிடைகள் மிருதுவாகாமலும், வழவழப்படையாமலும் போதல் ; (2) மலத்தின் நீர்ப்பாகம் உறியப்படுமட்டோ, அல்லது அசங்கியையான வாயுவாக வெளிவருமட்டோ, அது தங்கியிருத்தல் ; (3) அதிகமாக நீரை உறியும்படியான ஆகாரத்தை உபயோகித்தல் ; (4) மலத்தைக் கட்டும்படியான ஆகாரத்தையோ, மருந்தையோ உட்கொள்ளுதல்; (5) போஷணையுள்ள ஆகாரத்தைமட்டும் வழக்கமாய் உபயோகித்தல்; ஆகாரத்தில் கனபதார்த்தமும் வேண்டும் ; போஷணையுள்ள பதார்த்தமும் வேண்டும் ; (6) அளவுகடந்து உண்பதனால் ஜீரணக்கருவிகளும் குடல்களும் அதிகமாக விரிந்துபோகும் ; (7) குடல்களிலுள்ள சதையின் தசைநார்கள் தளர்ந்துபோதல் ; அதனால் அவை மெதுவாகச் சுருங்குகின்றன ; (8) இறுகக்கட்டிய உடையாலோ, வியாதியாலோ சுவாஸ சம்பந்தமான உறுப்புக்கள் சுருங்கிப்போய் அதனால் டயபிராத்தை ஆழமாக அமுக்க முடியாமற்போதல் ; (9) அடிவயிற்றின் சதைகள் பலஹீனப்பட்டோ, அல்லது பருத்தோ அதனால் முன்பக்கம் குடல்கள் அமுக்கமுடியாமற் போதல் ; (10) ரெக்டம் அரைவாசியோ, முழுதனுமோ அசக்தமடைந்து, அதனால் மலத்தை வெளித்தள்ள அதற்கும் போதுமான பலம் இராமற்போவது. மலச்சிக்கலுக்கு ஆதிகாரணங்கள் எப்போதும் உட்கார்ந்துகொண்டே வேலைசெய்வதும், இரத்தம் சுத்தமில்லாமல் இருப்பதுமேயாம்.

மலச்சிக்கலின் குறிகளாவன : குடல்கள் நிரம்பி, விரிந்த மாதிரியான ஒரு உணர்ச்சி ; உறக்கம், ஓய்ச்சல், தலைவலி, சில கேசுகளில் சுவாஸம் நாற்றமெடுத்து, மலம் துர்க்கந்தம் வீசுதல் ; ஸ்திரீ புருஷர்களுடைய மர்ம ஸ்தானங்களுக்குக் கெடுதல் நேரிடுதல் ; கல்லீரலின் சுறுசுறுப்பு அடங்கிப்போய், மலச்சிக்கல் தீராமல் நாட்பட இருந்துவந்தால், பித்தநீரும், மற்ற கழிவடைகளும், சர்மத்திலுள்ள சந்துகளின் வழியாய் வெளியாவது இயற்கை ; அம்மாதிரி அது வெளிவரும்போது ஒரே துர்க்கந்தம் வீசும்.

மலச்சிக்கலுக்கு சிகிச்சை செய்யும்போது, அதன் காரணங்களைக் கண்டறிய வேண்டும் ; ஆகாரத்தில் மாறுதல் வேண்டும். "வறுத்ததும், சுட்டதுமான உருளைக்கிழங்குகளும், பழுப்பு நிறமாகும்படி சமைக்கப்பட்ட காய்கறிகளும், மாமிசமும், நுண்ணிய கோதுமை ரொட்டியும், எந்தவிதமான அரிசி சாப்பாடும், தித்திப்பான ஆப்பில் பழங்களும், மலத்தைப் பந்தனம் பண்ணும்படியான எவ்வித ஆகாரமும், பழமும், வழக்கமாய் மலச்சிக்கல் உள்ள ஜனங்களுக்குக் கெடுதலானவை". மலத்தைக் கழிக்கும் குணத்தையுடைய பழங்களை உண்பதனால் மலச்சிக்கல் தீரும். அப்பழங்களுள் திராக்ஷை சிறந்தது. திராக்ஷைப் பழத்தின் சிறப்பைக் குறித்து ஒருவர் பின்வருமாறு சொல்லியிருக்கிறார் :—"ஆரோக்கியமாயிருக்கும்போது சதையை மாத்திரம் விழுங்கு; குடலில் மலச்சிக்கலிருந்து மலத்தைக் கழிக்க வேண்டுமானால், சதையுடன் கொட்டையை விழுங்கு ; தோலைத் தள்ளு ; மலக்கழிச்சல் அதிகமாகவிருந்தால் அதை நிறுத்த, கொட்டையைத் தள்ளி சதையைமட்டும் விழுங்கு ; தவிர தோலை நன்றாய் மென்று மலத்தைக் கட்டும்படியான அதன் ரஸத்தைமட்டும் விழுங்கு என்பதே.

